ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி

சங்கராச்சாரிய ஸ்வாமிகளின்

# அருள் உரை






விகடன்

வெளியீடு

# அத்வைதம்



## மூன்றாவது வழி

தத்வங்கள், ஸித்தாந்தங்கள் இருக்கட்டும். நடைமுறையில் நாம் எப்படியிருக்கிறோம்? அவன் விட்ட வழி என்று நம்பிக்கையோடு கிடப்பதற்கு நம்மால் முடிகிறதா? அத்தனை பக்தி, வைராக்யம் நமக்கு இருக்கிறதா? இல்லவே இல்லை. சரி, அப்படியானால் நாம்தான் முயற்சி பண்ணி அவன் அருளை வலியப் பெற்றுக் கொள்ள வேண்டுமென்று ஸதாவும் அவனையே பிடித்துக் கொண்டிருக்கவாவது நம்மால் முடிகிறதா? இதுவும் முடியவில்லை.

'நல்லதோ பொல்லாததோ நமக்கென்று என்ன இருக்கிறது? அம்மாக்காரி செய்கிறபடி ஆகட்டும்' என்பதாக, சுயமுயற்சியே இல்லாமல் மார்ஜார கிசோரமாகக் கிடக்கவும் நமக்குப் பக்குவம் இல்லை. 'அம்மாவை விடாமல் கட்டிப் பிடித்துக் கொண்டிருக்க வேண்டும்; பிடிவாதமாக அவள் ரக்ஷணையைப் பெற்றே தீரவேண்டும்' என்று மர்க்கட கிசோரமாக சரணாகதி பண்ணவும் நமக்குப் பக்குவம் போதவில்லை.

இரண்டும் இல்லாவிட்டால், இப்படி இரண்டுங் கெட்டானாக இருந்தால் எப்படித்தான் உருப்படுவது? அதற்கு என்ன வழி? இரண்டு வழிகள், முறைகள், நியாயங்களை மேலே சொன்னேன். இரண்டும் முடியாது என்றால் என்ன செய்வது? யாரிடம் போவது? எந்த வழியிலானாலும் சரணாகதி செய்வதற்குரிய பக்குவமில்லாத நாமும் போகக் கூடிய மூன்றாவது வழியைச் சொல்பவர் யாராவது இருக்கிறார்களா?

இருக்கிறார். நம் சங்கர பகவத் பாதாள்தான் அவர்!

'இரண்டுவித சரணாகதியும் பக்தியில் வருவது. இந்தப் பக்தியே நமக்கு எட்டமாட்டேன் என்கிறது. ஆசார்யாளோ இதைவிடக் கஷ்டமான ஞானத்தைச் சொல்கிறவரல்லவா? 'பக்தனும் இல்லை, பகவானும் இல்லை என்று அப்படியே பிரம்மமாக இருந்துவிடு' என்கிறவரல்லவா? நாம் இருக்கிற ஸ்திதியில், அது கொஞ்சங்கூட ஸாத்யமில்லாத விஷய மல்லவா?' என்று தோன்றலாம்.

ஆசார்யாள் ஞானத்தைச் சொன்னவர்தான். ஆனால் அவர், அதிகாரி பேதம் பார்த்து இன்னார் இருக்கிற நிலைக்கு இன்ன வழிதான் ஸாதனம் என்று உணர்ந்து கர்மம், பக்தி இவற்றைக்கூட அங்கீகாரம் பண்ணி இந்த மார்க்கங்களிலும் வழி காட்டியிருக்கிறார். இவற்றில் போனாலே, ஒற்றையடிப் பாதை ஹைரோட்டில் கொண்டு சேர்க்கிற மாதிரி, இவை ஞானத்தில் கொண்டு போய் விட்டுவிடும் என்று சொல்லியிருக் கிறார். இப்படித்தான், பக்தியிலும் மேலே சொன்ன இரண்டு வழிகளைத் தவிர, பக்குவம் போதாத நமக்கும் கொஞ்சத்தில் கொஞ்சம் ஸாத்யமாக ஒரு மூன்றாவது வழியைச் சொல்லி யிருக்கிறார்.

மர்க்கட கிசோரம், மார்ஜார கிசோரம் ஆகிய இவ்விரண்டு முறை, அல்லது நியாயத்தைத் தவிர மூன்றாவதாக ஒரு நியாயத்தை ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதர்கள் தமது சிவானந்த லஹரியில் கூறுகிறார்.

இங்கே மனத்தை அவர் குரங்காகத்தான் சொல்கிறார். ஓயாமல் அலை பாய்வதில் அது குரங்காகத்தான் இருக்கிறது. ஆனால் ஸ்வாமி என்ற தாயைத் தானாகக் கட்டிக் கொள்கிற விஷயத்தில் மட்டும் நம் மனம் குரங்காக இருக்கவில்லை. எனவே, ஸ்வாமியே குரங்காட்டியாக வந்து இந்தக் குரங்கைக் கட்டி வைத்துக் கொள்ள வேண்டும் என்கிறார், நம் ஆசார் யாள். இந்த மனக் குரங்கு சில சமயம்தான் முறையான வழியில் போகிறது. திடீரென அடர்ந்த காட்டுக்குள் போய் வழி இன்றித் தவிக்கிறது; அலைகிறது. அப்படிப்பட்ட இந்தக் குரங்கை யாராவது ஒரு குரங்காட்டியிடம் கொடுத்துவிட வேண்டியதுதான் முறையாகும். அதனால் குரங்கும் பிழைக்

கும்; குரங்காட்டிக்கும் பிழைப்பு நடக்கும்.

'நீயோ கபாலக் கப்பரையை வைத்துக் கொண்டு பிச்சைக் காரனாக, பிக்ஷாடனனாகத் திரிகிறாய். உனக்கு ஏற்ற குரங்கு இருந்தால் அதைக் கொண்டு நீயும் பிழைக்கலாம். குரங்கும் உன்னால் அடக்கப்பட்டுச் சீரடையும். உனக்குத் தகுந்த குரங்கு ஒன்று உண்டென்றால், அது என்னுடைய மனம்தான். என் மனமானது குரங்குக் குட்டியாக இருந்தாலும், நீ அதற்குத் தாயாக இருப்பதை அறிந்து அது உன்னைப் பற்றிக் கொள்ள வில்லை. மனம் பூனைக் குட்டியாகவும், நீ தாய்ப் பூனை யாகவும் இருந்தாலாவது நீயாகவே அதைத் தூக்கிச்சென்று காப்பாற்றுவாய். ஆனால் இதுவோ அடங்காத குரங்கு. நீயும் பூனையாக இல்லாமல் பிச்சைக்காரனாக இருக்கிறாய். ஆகவே, நீ ஒரு கயிற்றைக் கொண்டு இந்தக் குரங்கைக் கட்டிப் போட்டுத்தான் அடக்க வேண்டும். இதனால் நீயும் வெறுமே பிச்சை கேட்கிற தடியாப் பிள்ளையாக இல்லாமல், குரங் காட்டி வித்தை என்று ஒரு பொழுதுபோக்கைக் காட்டி, கலைஞன் என்ற ஹோதாவில் ஸம்பாவனை கேட்பதாக ஒரு கௌரவம் பெறுவாய். இந்தப் பொல்லாத குரங்கு உன்னிடமிருந்து தப்புவதற்குப் பலவாறு முயற்சி செய்யும். நீ அன்பு என்கிற கயிற்றால் அதைக் கட்டி இழுத்துச் செல் வாயாக!' என்கிறார் ஸ்ரீ ஆதிசங்கரர்.

பகவானிடம் நாம் செல்வம், ஆரோக்கியம், புகழ் இப்படி எது எதையோ வேண்டுகிறோம். உண்மையில், மனமானது கண்டபடி அலையாமல் அதைக் கட்டுப்படுத்துவதற்குத்தான் ஸ்வாமியின் அருளை நாம் கோர வேண்டும். மனம் அவசிய மற்றவைகளையெல்லாம் செய்யத் தூண்டும். கண்ணால் காணக்கூடாதவைகளைக் கண் பார்க்கிறது. காதால் கேட்கக் கூடாதவற்றைக் காது கேட்கிறது. நாக்கினால் ருசிக்கக் கூடாதவைகளை நாக்கு ருசிக்கத் துடிக்கிறது. இதற்கெல்லாம் காரணம், மனம் பல பொருள்களைக் கண்டு மயங்குவதுதான். இதற்கெல்லாம் மேலான அழகுள்ள பொருள் கிடைத்து விட்டால், மனமானது இவற்றை விட்டுவிட்டு அந்த ஓர் அழகு வஸ்துவையே பற்றிக் கொண்டு திருந்திவிடும். ஒரு குழந்தைக் குப் பொரி உருண்டையின்மேல் மிகவும் பிரியம். ஆனால் லாடு கிடைத்தால், அதே குழந்தை பொரி உருண்டையைத்

தூக்கி எறிந்துவிட்டு லாடுவை எடுத்துக் கொள்கிறது. அதுபோல் மற்ற எல்லாவற்றையும்விட அழகான பொருள் கிடைத்தால் மனம் அதில் மயங்கிக் கட்டுண்டு கிடக்கும். அப்பேர்ப்பட்ட அனைத்திலும் அழகிய வஸ்து ஈசுவரனே! 'பிச்சைக்காரனான நீ, மிக அழகுடையவனான நீ, இந்த மனக்குரங்கைக் கட்டிப் பிடித்துக் கொண்டு போய்விடு வாயாக!':

*கபாலின்! பிக்ஷோ! மே ஹ்ருதய கபிம்*
*அத்யந்த சபலம்*
*த்ருடம் பக்த்யா பத்த்வா சிவ, பவத்*
*அதீனம் குரு விபோ!*

என்று ஆசாரியாள் சிவானந்த லஹரியில் கூறுகிறார்.

'கபி' என்றால் குரங்கு. ஹ்ருதய கபி: மனக் குரங்கு.

பகவானிடம் புதிதாக ஒன்றும் நாம் கேட்டுப் பெற வேண்டியதில்லை. நம்மிடம் இல்லாமல் அவனிடம் உள்ள ஏதோ ஒன்றைக் கேட்க வேண்டியதில்லை. நம்மிடமே இருக் கும்படியான நம் உண்மை ஸ்வரூபத்தை நாம் அறியவில்லை. நம்முடைய உண்மை ஸ்வரூபம் ஆனந்த மயமானது. பகவானேதான் அது. பரமாத்மாவேதான் அது. அப்படிப் பட்ட நம் நிஜ ஸ்வரூபத்தை மனத்தால் மறைத்துக் கொண்டு ஓயாமல் துக்கப்படுகிறோம். 'என் உண்மை நிலையை உணர அருள்வாயாக! என்னை நான் அறிய முடியாதபடி, இந்த மனஸு ஆட்டிப் படைக்கிறது. இதை அன்பினாலே கட்டி, கட்டுப்படுத்தி என்னிடம் கொடுத்தால் போதும். என் ஸ்வரூபத்தையே நான் காண முடியாமல் கெடுக்கும் இந்தக் கெட்ட மனப்போக்கை நீ எடுத்துப் போ. என் ஸ்வரூபத் தையே எனக்களித்து அதைக் காக்க வேண்டிய காவலன் நீ!' என்று பிரார்த்திப்போம்.

'தாய் விட்டபடி' என்றிருக்கும் பூனைக் குட்டிபோல் பகவானைச் சரணடைய நமக்குப் பக்குவமில்லை. குரங்காகத் திரிகிறது நம் மனஸு. ஆனாலும் குரங்குக் குட்டிபோல் அவனைப் பற்றிக் கொள்ளவும் நமக்குப் பக்குவமில்லை. குரங்குக் குட்டியாக இருந்து கொண்டே, பூனையம்மாவின்

ரக்ஷணையைக் கேட்பவர்களாக இருக்கிறோம்! ஆகவே, ஆசார்யாளின் மூன்றாவது வழியைப் பின்பற்றி நாமும் 'மனத்தை நீயே அடக்கி அருள்வாய்' என்று பிரார்த்திப்போம்.

இது முதலில் ஸதாகாலப் பிரார்த்தனையாக இருக்காது. ஸதாவும் பிரார்த்திக்கிறோம் என்றால், எப்போதும் அவனை விடாமல் பிடித்துக் கொண்டு மர்க்கட கிசோரமாக இருக்கிறோம் என்றாகிவிடுமே! நமக்குத்தான் அவ்வளவு யோக்கியதை இல்லையே! ஆனாலும் ஏதோ கொஞ்சம் தவிப்பு, உருப்பட வேண்டும் என்ற கவலை உண்டாகி விட்டதல்லவா? ஏதோ ஒரு நிலையில், இரண்டு நிமிஷமாவது பிரார்த்தனை என்று பண்ணத் தோன்றுகிறதல்லவா? அப்போது இந்தப் பிரார்த்தனையைப் பண்ணிக் கொள் என்று ஆசார்யாள்' வழிகாட்டுகிறார்.

'நான் முழுவதும் குரங்காக இல்லை. மற்ற எல்லா விஷயத்திலும் மனஸு குரங்காகத் திரிந்து கொண்டிருந்தாலும் உன்னைப் பிடித்துக் கொள்கிற விஷயத்தில் மட்டும் அப்படியில்லை. வரனுக்கு எல்லா qualifications-னும் (தகுதியும்) இருக்கிறது; ஆயுள் பாவம் மட்டுமில்லை என்கிற மாதிரி, எதில் முக்கியமாகக் குரங்காக இருக்க வேண்டுமோ, அது ஒன்றைத் தவிர பாக்கி எல்லாவற்றிலும் குரங்காக இருக்கிறேன்! அதனால் இந்த விஷயத்தில் நீதான் தாய்ப் பூனை மாதிரிச் செய்ய வேண்டும். ஆனாலும் நான் முழு குரங்குக் குட்டியாக இல்லாதபோது உன்னை மட்டும் முழு தாய்ப் பூனையாக இருக்கச் சொன்னால் அது நியாயமில்லை. உன்னிடம் அவ்வளவு பெரிய அனுக்ரஹம் எதிர்பார்க்க எனக்கு யோக்கியதை இல்லை. அதனால் ஒரேயடியாக நீ என்னை ஆட்கொண்டு நடத்திக்கொண்டு போ என்று நான் சொல்லவில்லை. ஆனால் என் அலைபாயும் குரங்கு மனஸையும் ஏதோ கொஞ்சம் சரிபண்ணிக் கொண்டு நான் இந்த நிமிஷம் உன்னைப் பிரார்த்திக்க வந்திருக்கிறேன் அல்லவா? இந்தப் பிரார்த்தனை இன்னும் வலுப்பதற்குப் பக்திக் கயிற்றால் சற்று என்னைக் கட்டிப் போடு. உன்னை விட்டுவிட்டு அந்தக் கயிற்றின் நீளத்துக்கு நான் ஓடிக் கொண்டுதான் இருப்பேன். நீயும் அந்த அளவுக்கு ஆட்டம் பார். ஆனால் ஒரேயடியாக உன்னிடமிருந்து நழுவிப் போவதற்கு விடாதே. இம்மாதிரி,

உன்னுடனேயே ஒட்டிக் கொண்டிராவிட்டாலும், உன்னை விட்டு ஒரே ஓட்டமாக ஓடாமல் நீ என்னைக் கொஞ்சம் விட்டுப் பிடித்தால், அதுவே இந்த ஸ்டேஜில் எனக்குப் போது மானது. உன்னை நான் விடாமல் மர்க்கட கிசோரமாகப் பிடித்துக் கொள்வதோ, நீ என்னை விடாமல் பிடித்துக் கொள் வாய் என்று பூர்ணமாக நம்பி நான் எந்தப் பாரமும் இல்லா மல் மார்ஜார கிசோரமாகக் கிடப்பதோ – இந்த இரண்டில் எதுவோ ஒன்று எப்போது வாய்க்கிறதோ அப்போது வாய்த்துவிட்டுப் போகட்டும். இப்போதைக்கு ஒரு நிமிஷம் நான் குரங்குக் குட்டியாக இந்தப் பிரார்த்தனையாவது பண்ணுகிறேன் அல்லவா? இதற்குப் பிரதியாக நீயும் கொஞ்சம் தாய்ப் பூனையின் ஸ்வபாவத்தைக் காட்டி என்னை இன்னும் கொஞ்சம் கொஞ்சமாக முன்னேறப் பண்ணுவதற்கு எண்ணு. அதாவது, எனக்கு உன்னிடம் உள்ள அன்பை, பக்தியைக் கொஞ்சம் கொஞ்சமாக வளர்த்துக் கொண்டு போகப் பண்ணு' என்றிப்படிப் பிரார்த்தனை பண்ண வேண்டும்.

முதலில், நாமிருக்கிற நிலையில், 'பக்தியைத் தா' என்று பிரார்த்தனை பண்ணுவோம். பக்தி வந்தபின் பிரபத்தியில் எது, மர்க்கட கிசோரமா, மார்ஜார கிசோரமா என்பதைப் பார்த்துக் கொள்ளலாம். அந்த இரண்டுக்குமே மூலாதாரமாகப் பக்தி அல்லவா இருந்தாக வேண்டும்?

இரண்டுமே கலந்து கலந்துதான் வருகிறது என்கிற மாதிரி, ஆசாரியாள் ச்லோகத்திலிருந்து தொனிக்கிறது. பிரார்த்தனை என்று ஒன்றைப் பண்ணுகிறோம் என்ற அளவுக்கு நாம் குரங்குக் குட்டியாக அவனைத் துளி பிடித்துக் கொள்ளத்தான் செய்கிறோம். ஆனால் பிடிப்பு உறுதியாக இல்லை. பிடி நழுவி நாம் விழுந்துவிடுகிற ஸ்திதியில்தான் இருக்கிறோம். இப்போது, அதாவது நம் முயற்சி போதாதபோது, அவனே பூனையம்மாவைப்போல் நமக்கு உறுதி தர வேண்டியிருக்கிறது என்ற உணர்வைப் பெற வேண்டும். 'நான் நழுவி விழாமல் பக்திக் கயிற்றைப் போட்டுக் கட்டிப் பிடித்துக் கொள் – த்ருடம் பக்த்யா பத்த்தவா பவத் அதீனம் குரு' – என்று வேண்டிக் கொள்ள வேண்டும்.

'உன் அருள் என்ற கயிற்றால் கட்டிப் போடு' என்று

ஆசார்யாள் சொல்லவில்லை. அப்படிச் சொன்னால், அவனே பூனை கவ்விக் கொள்கிற மாதிரி நம்மைக் கயிற்றால் தன் வசத்தில் வைத்துக் கொண்டு, நம்மை உய்விக்கிற பொறுப்பைத் தானே வைத்துக் கொண்டு விடுகிறான் என்று ஆகி விடும். பக்த்யா பத்த்வா என்றே சொல்கிறார். அதாவது 'உன் அருளால்' கட்டு என்று சொல்லாமல், 'என் பக்தியாலேயே என் மனஸைக் கட்டு' என்கிறார். 'பக்தி வலையில் படுவோன்' என்று மாணிக்கவாசகர் சொன்ன மாதிரி ஆசாரியாள் சொல்லவில்லை. அதாவது நம்மை விட்டு ஓடிக் கொண்டிருக்கிற அவனையே நாம் பக்திக் கயிற்றால் கட்டுகிறோம் அல்லது பக்தி என்ற வலைக்குள் பிடித்து விடுகிறோம் என்று சொல்லவில்லை. இப்படிச் சொல்லியிருந்தால் அது முழுக்க மர்க்கட கிசோர நியாயமாக ஆகிவிடும்.

இரண்டும் இல்லாமல், இரண்டும் கலந்த மாதிரி ஆசாரியாள் சொல்கிறார். பக்தியால் அவனைக் கட்டுகிற பக்குவந் தான் நமக்கு இல்லையே! அதனால் இப்போது இந்த ஆரம்ப நிலையில் பக்தியையே அவன்தான் தர வேண்டும். நாம் பக்தியே செய்யாமல் அவனே நம்மை ஒரேயடியாக உய்வித்து மோக்ஷத்தில் சேர்த்துவிட வேண்டும் என்றும் எதிர்பார்க்கக் கூடாது. அது ரொம்பவும் தகாத ஆசை. அதனால் 'பக்தியைக் கொடு; அப்படிக் கொடுப்பதே உன் அருள்தான்' என்று வேண்டிக் கொள்ள வேண்டும். 'அவன் அருளாலே அவன் தாள் வணங்கி' என்று மாணிக்கவாசகரும் சொல்கிறது போல, அவன் தன் அருளால் நேரே மோக்ஷத்துக்குத் தூக்கி விடாமல், முதலில் நாம் அவனை பக்தி பண்ணுகிறதற்கே அருள்செய்ய, அப்புறம் நம் பக்திக்கு இரங்கி மோக்ஷம் தர வேண்டும். இப்படிப் புருஷப் பிரயத்தனமும், தெய்வானுக்ரஹமும் கலந்து வந்தால்தான் நன்றாயிருக்கிறது. நியாயமாயிருக்கிறது. இப்போது நமக்குச் சுரக்க வேண்டிய அன்பை(பக்தியை)யே அவன் ஒரு கயிறாகத் தரட்டும். பக்தியால் நாம் அவனைக் கட்டுவதும் கட்டாததும் பிற்பாடு நடக்கிறபடி நடக்கட்டும். இப்போதைக்கு அவனே நாம் பக்தியை விட்டுவிடாத மாதிரி, அதனால் நம்மைச் சுருக்குப் போட்டுக் கட்டிவிடட்டும் – என்றிப்படி மர்க்கட கிசோர நியாயமாகவும் இல்லாமல், மார்ஜார கிசோர நியாயமாகவும் இல்லாமல், ஒரு வழியை ஆசார்யாள் சொல்லிக் கொடுக்கிறார்.

'பிரபத்தியில் இப்படியா அப்படியா? குரங்குக் குட்டி யாகப் பற்றிக் கொள்ள வேண்டுமா, அல்லது பூனைக் குட்டி யாகத் தன் செயல் இல்லாமல் கிடக்க வேண்டுமா' என்று வாதம் செய்து சண்டை போட்டு, ஏதாவது ஒன்றை நிலை நாட்டி விடலாம். ஆனால், அது வெறும் வாதமாகத்தான் இருக்குமே தவிர, காரியத்தில், நம்மில் அபூர்வமாக லக்ஷத்தில் ஒருத்தனைத் தவிர, எவராலும் இரண்டு விதங்களில் எதிலும் சரணாகதி பண்ண ஸாத்யப்படாது. இதற்காக நாம் மனம் தளர்ந்து விடாமல், நம் நிலையிலும் ஸாத்யப்படுகிற மாதிரி, 'பக்தி வரம் தா அப்பா!' என்று பிரார்த்திக்க, ஆசார்யாள் வழி சொல்லிக் கொடுக்கிறார்.

இப்போதைக்கு இந்த மூன்றாவது வழியில், நிஜ பக்தியைக் கொடு என்று பிரார்த்தனை பண்ண முடிந்த மட்டும் பண்ணு வோம். அப்புறம் அது முதலில் சொன்ன இரண்டு வழிகளில் எதில் கொண்டு சேர்க்கிறதோ, அல்லது பகவத்பாதாளின் ஞான மார்க்கத்தில்தான் சேர்க்கிறதோ, அப்படிச் சேர்த்து விட்டுப் போகட்டும். எந்த நதியானாலும் முடிவில் அதை ஸமுத்ரம் எடுத்துக் கொள்கிற மாதிரி எந்த வழியானாலும் அதன் முடிவில் ஒருவனேயான பரமாத்மா நம்மை எடுத்துக் கொள்வான்.

'என் மனஸைக் கட்டி உன் ஆதீனத்திலேயே வைத்துக் கொள்ளு' என்று இங்கே நம்முடைய பக்தி பாவத்தை ஈச்வரப் பிரஸாதமாகவே ஆசார்யாள் விட்டுவிடுகிறார். அவரது பாஷ்யங்களிலும், அத்வைத பிரகரண கிரந்தங்களிலும் ஈச்வர ஆராதனத்தை மனம் ஒருமைப்படுவதற்காக அவர் உபாய மாகச் சொல்லியிருந்தாலும், ஈச்வரனின் அருளாலேயே பக்தி யும் ஸம்பாதித்துக் கொள்ளப்பட வேண்டும் என்று சொல்ல வில்லை. அந்த அத்வைத நூல்கள், ஞானவிசாரமும், ஆத்மத் தியானமும் செய்யக்கூடிய பக்குவம் பெற்றவர்களுக்கு ஏற்பட்டது. இங்கே 'சிவானந்த லஹரி'யில் நம் எல்லோராலும் முடிந்த பக்தி மார்க்கத்தைக் காட்டுவதால் இந்த மாதிரிச் சொல்கிறார். பக்தியினால் (உபாஸனையால்) ஸாதகனே மனஸைக் கட்டவேண்டும் என்று ஞானப் புஸ்தகங்களில் சொன்னார். இங்கே ஈச்வரனிடம், 'அப்பா, பக்தியைத் தந்து, அதனால் எங்கள் மனஸைக் கட்டிப்போடு' என்று அவனிடமே

விட்டுவிடுகிறார் ஆசார்யாள்.

'ஹ்ருதய கபிம் அத்யந்த சபலம்' என்று ஆசார்யாள் சொல்கிறபடி, மகா சபலத்துடன் தாவிக் கொண்டேயிருக்கிற மனக் குரங்கை ஈச்வரன் கட்டி வைத்து, முதலில் அது கயிற்றின் நீளத்துக்குத் தாவுகிற மாதிரி விட்டுப் பிடித்தாலும், அப்புறம் அது அவன் ஆட்டினால்தான் ஆடுவது என்று குரங்காட்டியின் குரங்கு மாதிரிச் சும்மா இருக்கிறபடி செய்து விடுவான். மனஸ் இப்படித் துளிக்கூடத் தானாக நகராத போது, அதை அவனும் ஆட்டி வைக்கா விட்டால், அதுதான் மனமே அழிந்துபோய் ஆத்மா மட்டும் பிரகாசிக்கிற அத்வைத ஸித்தியான மோக்ஷம். இப்படிப்பட்ட அத்வைதத்தைத் தருவதும் பரமாத்மாவின் கையில்தான் இருக்கிறது என்கிற மாதிரி இங்கே கயிற்றை அவன் கையிலேயே கொடுத்திருக்கிறார்! இந்த ச்லோகம் பக்திப் பிரார்த்தனையாக இருக்கும் போதே அதற்குப் பலனாகப் பரமாத்மா ஞான மோக்ஷத்தைக் கொடுக்கவும் செய்யலாம் என்கிற அபிப்பிராயத்தையும் கொடுக்கிறது.

பின்னாடி ஒரு ச்லோகத்தில் இந்த அபிப்பிராயம் இன்னும் கூட ஸ்பஷ்டமாக வருகிறது. அந்த ச்லோகத்தில் மனஸை ஒரு மதயானைக்கு ஒப்பிட்டுவிட்டு, 'இந்த யானையை ஞானம் என்கிற கருவியால் உன் பாதமான தறியில் கட்டிவிடு' என்கிறார்: ஹ்ருதய மதேபம் பதான சித்யந்த்ரை:

இங்கே 'பக்த்யா பத்த்வா' (பக்தியினாலே கட்டி) என்றவர், அங்கே 'பதான சித்யந்த்ரை:' (ஞானத்தால் கட்டு) என்கிறார். பக்தியைத் தருவது, ஞானத்தைத் தருவது, அதனால் முடிவில் அத்வைதத்தையே தருவது ஆகிய எல்லாமும் பரமாத்மப் பிரஸாதமாகவே கிடைக்கக் கூடியவை என்று இதிலிருந்து தெரிகிறது. நமக்கு அவன் பக்தியைத் தந்து, நாம் அவனை பக்தி பண்ணிக் கொண்டிருந்தாலே, அவன் ஞான மோக்ஷாதிகளைக் கொடுத்துவிடுவான் என்ற தாத்பரியம் ஏற்படுகிறது.

அந்தப் பக்தியை முதலில் பிரார்த்திப்போம். அதனால் இரண்டில் ஒரு தினுஸான சரணாகதி ஸித்திக்கும். அவன் விட்ட வழி என்று, நம் மனஸுக்கென்று ஆசையும் ப்ளானும்

இல்லாமல் விட்டுவிடுவதுதானே சரணாகதி? இதுவும் ஞான மார்க்கத்தில் மனஸின் ஓட்டமே இல்லாத நிலை என்று சொல்லப்படுகிறதும் ஒன்றேதான். ஆத்ம விசாரத்தால் மனஸை நிறுத்துவதற்குப் பதில் இங்கே பக்தியால், அன்பினால் நிறுத்துகிறோம்.

பக்தி மார்க்கத்திலே சொல்லப்படும் இரண்டு விதமான சரணாகதிகளானாலும் சரி, ஞான மார்க்கத்திலே சொல்லப் படும் மனோ நாசமானாலும் சரி, எதற்கும் முதலிலே வழியாக இருப்பது பக்திதான். அதனால், ஆசார்யாள் சொல்லிக் கொடுக்கிற மாதிரியே – நாம் இப்போதுள்ள ஸ்திதியில் – 'இந்த என் மனக்குரங்கை பக்தி என்ற கயிற்றால் திடமாகக் கட்டி, உன் ஆதீனத்தில் வைத்துக் கொள்ளப்பா' என்று பரமாத்மாவிடம் பிரார்த்தனை செய்வோம்.

**மே ஹ்ருதயகபிம் அத்யந்த சபலம்**
**த்ருடம் பக்த்யா பத்த்வா**
**சிவ பவத் அதீனம் குரு விபோ॥**

# வேத மதம்



## நம் அறியாமை

உலகத்தில் புஸ்தகங்கள் நிறைய இருக்கின்றன. ஒவ்வொன்றும் ஒவ்வொரு விஷயத்தைச் சொல்லுகிறது. ஒவ்வொரு மதத்தினரும் ஏதாவது ஒரு புஸ்தகத்தைத்தான் நிரம்பவும் கௌரவமாக வைத்திருக்கிறார்கள். எல்லாம் புஸ்தகங்களேயானாலும், ஒரு புஸ்தகத்தை விசேஷமாகக் கொண்டாடுகிறார்கள். அதில் தான் ஜன்மம் கடைத்தேறும் வழிகள் சொல்லப்பட்டிருப்பதாகச் சொல்லுகிறார்கள். அந்தப் புஸ்தகத்துக்குப் பூஜை செய்கிறார்கள்; நமஸ்காரம் செய்கிறார்கள். சில மதஸ்தர்கள் அந்தப் புஸ்தகத்திற்கே தனியாகக் கோயில் கட்டி வணங்குகிறார்கள். ஸீக்கியர்கள் அவ்வாறு செய்து வருகிறார்கள். அவர்களுடைய மதப் புஸ்தகத்தை அவர்கள் 'கிரந்த ஸாஹேப்' என்று மரியாதையாகச் சொல்லுவார்கள். இப்படி ஒவ்வொரு மதத்தினரும் தங்கள் தங்கள் ஆத்ம க்ஷேமத்திற்கு வேண்டிய மார்க்கங்களைச் சொல்லும் ஒவ்வொரு புஸ்தகத்தைப் பெற்று இருக்கிறார்கள். இவை எல்லாம் ஒரு மத ஸ்தாபகரின் பெயரில் இருந்தாலும், வாஸ்தவத்தில் பரமாத்மாவின் வாக்கேதான், பகவானின் ஆக்ஞைதான் அந்தந்த மத ஸ்தாபகர் வழியாக வந்தது என்கிறார்கள். இதனால் இவற்றை Revealed Text என்கிறார்கள். இதையே நாமும் 'அபௌருஷேயம்' என்கிறோம். புருஷர்கள் (மனிதர்கள்) தாமே செய்வது பௌருஷேயம். இப்படியில்லாமல் பரமாத்மாவே மனிதனைக் கருவி மாத்திரமாகக் கொண்டு வெளியிடுவது அபௌருஷேயம்.

சரி, நம்முடைய வைதிக மதத்திற்கு ஆதாரமாக எந்தப் புஸ்தகம் இருக்கிறது? மற்ற மதஸ்தர்களை 'உங்கள் மதப்

புஸ்தகம் எது?' என்று கேட்டால் அவர்களுக்குச் சந்தேகமில்லாமல், இன்னது என்று தெரியும். கிறிஸ்தவர்கள் பைபிள் என்பார்கள். முஹம்மதியர்கள் குரான் என்பார்கள். பௌத்தர்கள் த்ரிபிடகம் என்பார்கள். பார்ஸியர் ஜெண்டவஸ்தா என்பார்கள். நம்மைக் கேட்டால் – இந்தக் காலத்தில் சைவர், வைஷ்ணவர், த்வைதி, அத்வைதி இன்னும் நம் தேசத்திலிருக்கப்பட்ட பல ஸம்பிரதாயத்தினருக்கும் பொதுவாக எந்த மதப் புஸ்தகம் இருக்கிறதென்றால், எல்லோரும் சேர்ந்து எந்த ஒன்றைச் சொல்லலாம் என்பதே தெரியாமல் விழிக்கிறோம்! இதற்கு என்ன காரணம்?

முக்கியமான காரணம் ஒன்று இருக்கிறது. மற்ற ஜனங்களுக்கு எந்த மதத்தில் ஜனனம் ஏற்பட்டிருக்கிறதோ அந்த மதத்தைப் பற்றிப் பள்ளிக்கூடத்திலேயே சொல்லிக் கொடுக்கிறார்கள். அல்லது மதப் படிப்பை முதலில் இரண்டு அல்லது மூன்று வருஷங்கள் படித்துவிட்டு, அப்புறம் லௌகிகப் படிப்பைப் படிக்கிறார்கள். அதனால் சிறு பிராயத்திலேயே அவர்களுக்கு மதத்தைப் பற்றிய ஞானம் ஏற்பட்டு விடுகிறது. நம்முடைய மதத்தில் மதத்தைப் பற்றிப் படிப்பதே கிடையாது. அப்படிப் படிக்காததனால் என்ன நிலைமை ஏற்பட்டிருக்கிறது? வேறு எந்த மதத்துக்காவது ஆள் வேண்டுமானால் நம்முடைய மதத்திலிருந்து பிடித்துக் கொண்டு போகிறார்கள். மற்ற மதஸ்தர்கள் தங்கள் மதத்திலிருந்து வேறொரு மதத்திற்குப் போவதில்லை. காரணம் பால்யத்திலிருந்தே மத சாஸ்திரங்களை அவர்கள் படிக்கிறார்கள். அதனால் அதனிடம் பற்று ஏற்படுகிறது. நாமோ பால்யத்தில் கொஞ்சம்கூட எட்டிப் பார்ப்பது இல்லை. என்ன வாசித்தாலும் ஏறாத வயதில் நாம் வாசிக்கிறோம். நம்முடைய மதப் புஸ்தகங்களை நாமே தூஷிக்கிறோம், அழிக்கிறோம்.

நம் படிப்பெல்லாம் வெள்ளைக்கார முறையில் உள்ள படிப்பு. பேச்சு, டிரெஸ், நடவடிக்கை எல்லாமே வெள்ளைக்காரர்களைப் போல இருக்க வேண்டுமென்பதுதான் நம் ஆசை. சுதந்திரம் வந்த பிறகும் இப்படியேதான் இருந்து கொண்டிருக்கிறோம். முன்னைவிட அதிகமாக வெள்ளைக்கார நாகரிகத்தையே நம் வாழ்முறையாக்கிக் கொண்டிருக்கிறோம். ஸ்வதேசியம், பாரத நாகரிகம், நம்முடைய தனிப் பண்பாடு என்று

பேசுவதில் மட்டும் குறைவில்லை. உள்ளே பரதேசியாக இருந்து கொண்டு வெளியில் சுதேசிப் பேச்சுப் பேசி என்ன பிரயோஜனம்? உள்ளும் புறமும் சுதேசியமாக இருப்பதென்றால், நம் தேசத்துக்கு முதுகெலும்பாக அனாதிகாலம் தொட்டு இருந்து வருகிற மதவிஷயங்களை பால்யத்திலேயே சொல்லிக் கொடுத்தால்தான் அது ஸாத்யமாகும். 'ஸெக்யூலர்.ஸ்டேட்'டில் (மதச்சார்பற்ற ராஜாங்கத்தில்) இதற்கு வழி பண்ணித் தர முடியவில்லை! அதனால் பழைய வெள்ளைக்காரப் படிப்பே தொடர்ந்து வந்திருக்கிறது. அதில் சொல்லிக் கொடுப்பதெல்லாம் 'நம்முடைய சாஸ்திரங்கள் 'ஸூபர்ஸ்டிஷன்' (மூட நம்பிக்கை) என்பதுதான்! இதனால், 'நம் மதத்துக்கு ஆதாரமான புஸ்தகம் என்ன? ஹிந்துக்கள் என்ற பெயருள்ள ஸகலருக்கும் பொதுவாக என்ன இருக்கிறது?' என்று கேட்டால்கூடப் பதில் சொல்லத் தெரியாத நிலையில் இருக்கிறோம்.

விஷயம் தெரியாதவர்கள் மட்டந் தட்டினாலும், இதர தேசங்களிலுள்ள விஷயம் தெரிந்தவர்களும் ஆத்ம ஸாதகர்களும் நமது ஆத்ம வித்யையை (லௌகிகம் என்று தோன்றுகிற வித்யைகள்கூட நம் தேசத்தில் ஆத்மாபிவிருத்திக்கே ஸாதனமாக இருப்பதால் நம்முடைய அரசியல் சாஸ்திரம், எகனாமிக்ஸ், நாட்டிய சாஸ்திரம் உள்பட எல்லாம் ஆத்ம வித்யைதான்) பாராட்டுகிறார்கள். தேடித் தேடி எடுத்துக் கொண்டு போய் தர்ஜுமா (ட்ரான்ஸ்லேட் = மொழிபெயர்ப்பு) பண்ணி வைத்துக் கொள்கிறார்கள். எனவே, லோகத்தில் நமக்கு ஒரு கௌரவம் வேண்டுமானால், அது எதனால் நமக்குத் தன்னால் பிறரது மரியாதை கிடைக்கிறதோ, அந்த சாஸ்திரங்களில் நம் அறிவை விருத்தி பண்ணிக் கொள்வதால்தான் ஏற்படும். ஸயன்ஸிலும் டெக்னாலஜியிலும் மற்றவர்களுக்கு மேல் நாம் பண்ணிக் கௌரவம் பெற முடியாது. அப்படியே இரண்டொருத்தர் நம்மில் நோபல் பிரைஸ் வாங்கினாலும், இதனால் நாம் பூரிக்கலாமே தவிர லோகம் பூரிக்காது. 'ஸயன்ஸும் டெக்னாலஜியும் நிறைவு தரவில்லை என்று நாம் ஹிந்துக்களிடம் போனால், அவர்கள் பிலாஸஃபியை விட்டுவிட்டு இதில் வந்து விழுந்திருக்கிறார்களே!' என்றுதான் நினைக்கிறார்கள். இந்தியாவில்தான், மற்ற அத்தனை தேசங்களின் மஹான்களைக் கூட்டினாலும், அதைவிட ஜாஸ்தியான மஹான்கள் தோன்றி ஆத்மானந்தத்தை அடைந்திருக்கிறார்கள் என்பது

தான் நம் பெருமை! அதற்கு ஆதாரமாக அவர்கள் கொடுத்துப் போயிருக்கிற சாஸ்திரங்களை நாம் தெரிந்து கொள்ளாமலிருப் பது ரொம்பக் குறைவான காரியம்.

நமக்கு ஆதாரமான மதப் புஸ்தகத்தின் பேரே தெரிய வில்லை. 'தெரியாததால் என்ன மோசம்? தெரிந்து கொள்வ தால் என்ன லாபம்?' என்றுகூடக் கேட்கிறோம்.

பாரத நாகரிகம் என்று லோகம் பூராவும் கொண்டாடுகிற பெரிய ஸம்பிரதாயத்தின் வாரிசுகளாக வந்திருக்கிற நாம் இப்படி இருக்கலாமா? 'நம் பண்பாடு என்னவானால் என்ன? பணம்தான் பெரிசு என்று கண்டம் கண்டமாகப் பறந்து கொண்டிருக்கலாமா?' இப்படி மற்ற தேசங்களுக்குப் போன வர்கள் பல பேர் என்னிடம் வருகிறார்கள். 'நாங்கள் போயிருக் கிற தேசங்களில் உள்ளவர்கள் எங்களிடம் நம் மதத்தைப் பற்றிக் கேட்கிறார்கள். வேதத்தைப் பற்றி, உபநிஷத்தைப் பற்றிக் கேட்கிறார்கள். கீதையைப் பற்றி, யோகத்தைப் பற்றி, கோயில்களைப் பற்றி, புராணங்களைப் பற்றி, இன்னும் இப்படி நம் மதத்திலுள்ள அனேக தத்வங்களைப் பற்றி ஆர்வத் துடன் கேட்கிறார்கள். எங்களுக்கு ஒன்றும் பதில் சொல்லத் தெரியவில்லை. அவர்களுக்குத் தெரிந்த அளவுகூட நம் மதத் தைப்பற்றி எங்களுக்குத் தெரியவில்லை. ரொம்பவும் அவமான மாக இருக்கிறது. அதனால் நீங்களாவது சுருக்கமாக நம் மத ஸித்தாந்தங்களை, தத்வங்களைப் புஸ்தகமாகப் போட்டுக் கொடுங்களேன்!' என்று கேட்டுக் கொள்கிறார்கள். அதாவது விதேசியமாக இருப்பதுதான் நமக்குப் பெருமை என்று நாம் நினைத்தாலும், அந்த விதேசிகள் நாம் இப்படியிருப்பதைப் பார்த்து மட்டமாகத்தான் நினைக்கிறார்கள். லோகத்துக்கெல் லாம் பழமையான ஒரு நாகரிகத்தவர்களுக்கு அதனிடம் பற்றுப் போய்விட்டதே என்று நம்மைப் பற்றிக் குறைவாகத் தான் மற்றவர்கள் நினைக்கிறார்கள்.

நாம் எதையுமே படிக்காமல், எதுவுமே தெரிந்து கொள்ளா மல் இருந்தால்கூடப் பரவாயில்லை. ஏதோ அறிவு போதாத ஜனங்கள் என்று வைத்து விடுவார்கள். ஆனால் இப்போது நாம் படிப்பதும், பேசுவதும், எழுதுவதும் கொஞ்சநஞ்சமல்ல. அத்தனையும் ஸயன்ஸ், டெக்னாலஜி, அரசியல், வேறு தினு

சான ஆராய்ச்சிகள், ஸினிமா, கண்ட கண்ட நாவல் என்று இப்படித்தான் இருக்கின்றன. அறிவு இல்லாத ஜனங்களாக இல்லாமல், நிறைய புத்தியைச் செலவழித்து நாம் இத்தனை படித்த போதிலும், எழுதிய போதிலும், நம் தேசத்துக்கே விசேஷமாயுள்ள அத்யாத்ம சாஸ்திரங்களைப் புறக்கணிக்கிறோம் என்பதாலேயே நம்மைப் பிற தேசத்தார் மிகவும் குறைவாக நினைக்கிறார்கள்.

ஏராளமான நூல்கள் நம் மத விஷயமாக உள்ளன. நமக்கு அதெல்லாம் வேண்டியிருக்கவில்லை. நாமும் நிறையப் படிக்கிறோம். ஆனால் எல்லாம் தேசாந்தர புஸ்தகங்கள்தான். மில்டன், வேர்ட்ஸ்வொர்த் எழுதினதெல்லாம் நமக்குத் தெரியும். பவபூதி என்ன எழுதினார், ஒட்டக்கூத்தர் என்ன எழுதினார் என்றால் தெரியாது. லூயி டைனாஸ்டி, ஜார் டைனாஸ்டி நமக்குத் தெரியும்; ஸூர்ய வம்சம், சந்திர வம்சம் தெரியாது. ஏன், நம் கோத்ர ரிஷிகள் பேரே தெரியாது! நமக்கு ஸம்பந்தமில்லாதவை கட்டுக்கட்டாகத் தெரியும். ஆனால், எதைக் கண்டு லோகம் பிரமிக்கிறதோ, அதற்கு ஆதாரமான நம் சாஸ்திரங்களின் பேர்கூடத் தெரியாது. சாஸ்திரக்ஞர்கள் சொல்ல வந்தாலும், நாம் காது கொடுத்துக் கேட்பதில்லை. அசட்டை செய்கிறோம். நம் தேசம் இப்படியொரு ஹீன ஸ்திதியில் இருக்கிறதே என்று ரொம்பவும் வேதனையாக இருக்கிறது.

'நம் பண்பாட்டைப் பற்றித் தெரிந்து கொண்டால் பணம் வருமா?' என்று நாம் கேட்டுக் கொண்டிருப்பதால் இப்படி ஆகியிருக்கிறது. வாஸ்தவத்தில் நாம் பணம் சம்பாதிப்பது, வாழ்க்கை நடத்துவது முதலான ஸகல விஷயங்களும் அந்தப் பண்பாட்டை நாம் பூரணமாகத் தெரிந்து கொண்டு, அனுஷ்டித்து, நிறைவு பெறவேண்டும் என்பதற்குத்தான்! என்ன காரணத்துக்காக நம் மதத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பது தப்பான கேள்வி. அதற்குக் காரணம், பிரதி பிரயோஜனம் எதிர்பார்ப்பது முழுப் பிசகு. நாம் செய்கிற எல்லாக் காரியங்களுக்கும் பிரயோஜனமாக இருப்பதுதான் மதமே தவிர, இதனால் வேறு பிரயோஜனம் வேண்டும் என்பதில்லை. மதானுஷ்டானத்தால்தான் எல்லாவற்றையும்விட மிகப் பெரிய பிரயோஜனமான சாந்தமும், பிரேமையும், மோக்ஷமும் கிடைக்கிறது என்பதை மறந்துவிட்டு, அதனால் பணம் வருமா, வசதி

கிடைக்குமா என்று மட்டும் பார்த்து, 'என்ன பிரயோஜனம்?' என்கிறோம். பற்று, பிரேமை இருந்துவிட்டால் இப்படிப் பிரதிப் பிரயோஜனம் எதிர்பார்க்கும் எண்ணமே எழாது. எதற்கு இது காரணமாக இருந்தால் நாம் இதை விரும்பு வோமோ, அந்தப் பணம், வசதி முதலானவற்றையெல்லாம் இதற்குக் காரணமாக வைத்துக் கொண்டு விடுவோம்.

சாஸ்திரத்தில் இப்படித்தான் சொல்லியிருக்கிறது. ப்ராஹ் மேணன நிஷ்காரணோ தர்ம: ஷடங்கோ வேத அத்யேயோ ஜ்ஞேயச்ச என்று இருக்கிறது.★ அதாவது, பிராம்மணனான வன் ஒரு காரணமும் இல்லாமலே வேதங்களையும் சாஸ்திரங் களையும் தெரிந்து கொள்ள வேண்டும் என்று சொல்லியிருக் கிறது. சின்ன வயதில்தான் இப்படிக் காரணம் கேட்காமல், பிரயோஜனத்தை எதிர்பார்க்காமல் ஒன்றைச் சொல்லிக் கொடுத்தால் கற்றுக் கொள்ளத் தோன்றும். 'சரித்திரம் எதற்குப் படிக்கிறோம்? பூகோளம் எதற்குப் படிக்கிறோம்?' என்று கேட்காமல் ஒரு குழந்தை ஸ்கூலில் படிக்கிறபோதே, நம் மதக் கிரந்தங்களையும் சொல்லிக் கொடுக்க வேண்டும். பிற்பாடு காலேஜுக்குப் போகிறபோது இவன் ஒரு உத்தேசத்தை, பிரயோஜனத்தை நினைத்துத்தான் படிக்கிறான். வக்கீலாக வேண்டும் என்றுதான் பி.எல். படிக்கிறான்; வாத்தியாராக வேண்டுமென்றுதான் எல்.டி. படிக்கிறான்; டாக்டராக வேண்டு மென்றுதான் எம்.பி.பி.எஸ். படிக்கிறான். லௌகிகமான பிரயோஜனத்தில் இப்போது ஆசை வந்துவிட்டது. அதனால் 'மதப் புஸ்தகத்தைத் தெரிந்து கொண்டு என்ன ஆக வேண்டும்? தெரிந்து கொள்வதால் என்ன லாபம்?' என்றுதான் கேட்பான். அதனால் இந்தக் கேள்வி முளைப்பதற்கு முன்பே, பால்யத்தில் இந்த விஷயங்களை ஆரம்பித்து விடவேண்டும். அப்போது தானே பற்று ஏற்பட்டுவிடும். அப்புறம் விடமாட்டான். பணம் காசைக் கொடுக்கா விட்டாலும் Sports-ல் (விளையாட்டில்) ஆசை உண்டாகிற மாதிரி, ஸங்கீதத்திலோ ஸினிமாவிலோ ஆசை உண்டாகிற மாதிரி மத விஷயத்திலும் ஏற்பட்டு விடும். தற்காலிகமான இன்பத்தைக் கொடுக்கிற விளையாட்டு, விநோதங்களிலேயே இப்படிப் பிரதிப் பிரயோஜனம் எதிர்

★ வ்யாகரண மஹா பாஷ்யம், ப்ரதம பஸ்பசாந்ஹிகம்.

பார்க்காத பற்று உண்டாகிறது என்றால், சாச்வத ஸௌக்யத்தைக் கொடுக்கக் கூடியதான மதவிஷயத்தில் உண்டாகாமல் போகாது. ஆதாரக் கல்வி (Basic Education)யை நாம் சரியாக அமைத்துத் தராததில்தான் தோஷம் இத்தனையும் இருக்கிறது.

'மதத்தைப் பற்றித் தெரிந்து கொண்டால் அது சோறு போடுமா?' என்று கேள்வி கேட்கிற நிலைமை இன்று இருப்பது ரொம்ப அவமானம். 'அத்யயனம் (வேதப் பயிற்சி) சாப்பாடு போடுமா என்று கேட்காதே! நாம் சாப்பிடுவதும் உயிர் வாழ்வதும் அத்யயனம் பண்ணத்தான் என்று ஆக்கிக் கொள்' என்று சாஸ்திரம் சொல்லியிருக்கிறது. 'காரணம் கேட்காமல் சாஸ்திரங்களைத் தெரிந்துகொள்' என்கிறது.

இப்படிக் காரணம் கேட்காமல் படிக்க வேண்டும் என்று சொல்லியிருக்கிற மதத்தில் குழந்தை பிறந்தவுடன் நம்முடைய வித்யையை அறிய முடியாமல் கத்தரித்து விடுகிறோம்! லௌகிக வித்யையை எடுத்தவுடன் வாசிக்கச் செய்கிறோம். பால்யப் பருவத்திலிருந்தே குழந்தைகளுக்கு ஆஸ்திகப் புத்தி வரும்படி நாம் பழக்கலாம். இந்த விஷயங்களைத் தவிர, மற்ற விஷயங்களில் குழந்தைகளுக்காக எவ்வளவோ செலவு செய்கிறோம். ஒரு தகப்பனார், தம்முடைய குழந்தைக்கு உபநயனம் செய்வதாயிருந்தால் டாம்பீக அம்சங்களுக்காக நூற்றுக்கணக்கில் செலவழிக்கிறார். அந்தச் செலவில் பத்தில் ஒரு பங்கு உபநயனத்திற்காக ஏற்பட்ட காரியத்தில் செலவழித்து, அந்தப் பையனை நல்ல பிரம்மசாரியாக-உருவாக்கினால் நம்முடைய மத நம்பிக்கை போகாது. உபநயன வைபவத்தின் செலவை விட உபநயன லக்ஷ்யத்திற்காகச் செலவு செய்வது விசேஷம். இந்த விஷயங்களில் பிரைவேட் டியூஷன் வைத்துக் குழந்தைகளுக்குச் சொல்லி வைக்க வேண்டும். அந்த விஷயங்களை அறிந்த வாத்தியார் மட்டும் ஏன் ஒருவித லாபமும் இன்றி இருக்க வேண்டும்? அவருக்கும் உபயோகமாக இருக்கும். மத விஷயங்கள் - பால்யத்திலேயே தெரிந்திருந்தால் ஸந்தேஹமே வராது. நம் மதத்துக்கு ஆதாரமான புஸ்தகமே இன்னதென்று தெரியாத கேவல நிலை வராது!

அப்படிப் படிக்காததனால் பலவித அபிப்பிராயங்கள் நம்மவர்களிடத்தில் இருக்கின்றன. ஒருவர் ஆஸ்திகராக இருக்

கிறார். வேறொருவர் நாஸ்திகராக இருக்கிறார். மற்றொருவர் பக்தி இல்லாமல் வெறும் கர்மானுஷ்டானம் மட்டும் செய் கிறார். வேறொருவர் அனுஷ்டானமின்றிப் பக்தி மட்டும் பண்ணிக் கொண்டு இருக்கிறார். இவர்களுக்குள் ஒருவருக் கொருவர் அபிப்பிராய பேதங்கள் ஏகப்பட்ட விதமாக இருக் கின்றன. இதற்காகச் சண்டை வேறு! ஸந்தேஹங்களோ ஆயிரக் கணக்கில் இருக்கின்றன! மதப் படிப்பை இளம் பருவத்திலேயே படித்திருந்தால் எல்லாருடைய அபிப்பிராயமும் ஒன்றாக இருக் கும். ஸந்தேஹம் இருக்காது. மதப் படிப்பைப் படிக்கிற மற்ற மதங்களில் இத்தனை கக்ஷிகள் இல்லை என்பதைப் பிரத்யக்ஷ மாகப் பார்க்கிறோம்.

நம்முடைய மதப் புஸ்தகம் என்ன? புஸ்தகத்தைத் தீர்மானம் பண்ணுவதே இந்தக் காலத்தில் சிரமமாக இருக்கிறது. நம்மு டைய புஸ்தகம் எதுவோ, அதில் சொல்லியிருக்கிறபடி நாம் அனுஷ்டானம் செய்து வந்தால் நமக்கு க்ஷேமம் உண்டாகும்.

மத க்ரந்தங்களில் எது சொல்லியிருக்கிறதோ அதே விஷயம் வேறு புஸ்தகங்களில் சொல்லியிருந்தாலும், தமது மதப் புஸ்தகம் இதுதான் என்று ஒன்றையே ஒவ்வொரு மதஸ்தர் களும் கொண்டாடுகிறார்கள். இன்றைக்கு ஒருவன் ஒரு புஸ்தகம் எழுதுவான்; நாளைக்கு வேறு ஒருவன் வேறு எழுதுவான். அவற்றில் நல்லதும் இருக்கலாம்; தப்பும் இருக்கலாம். ஆகை யால் ஏதாவது ஒன்றை ஸ்திரமாக ஏற்படுத்திக் கொண்டால் நல்லதல்லவா? அதற்காகத்தான் பல மதஸ்தர்களும் தங்கள் தங்களுக்குப் பிரமாணமாக ஒவ்வொரு புஸ்தகத்தை வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

நமது மதம் என்ன என்பதை எந்த மதப் புஸ்தகங்களிலி ருந்து தெரிந்து கொள்ள வேண்டும்? லைப்ரரிகள் கொள்ளாமல் லக்ஷக்கணக்கில் நம் மத விஷயமாக புஸ்தகங்கள் இருக்கின்றன. விஷயங்களும் அதிகமாக இருக்கின்றன. இவற்றையெல்லாம் பார்த்தால் மூளை குழம்பிப் போகும்போல் இருக்கிறது. ஒன்றுக்கொன்று அப்படி வித்யாஸம் இருக்கும். ஆனாலும், இதற்கெல்லாம் ஆதாரமாகப் பொதுவான சில நூல்கள் உண்டு.

நம்முடைய மத அனுஷ்டானத்தால் நல்ல அனுபவத்தை
அடைந்தவர்கள் இருக்கிறார்கள். உலகத்தையே மறந்து ஆனந்த
மாக ஏகாந்த நிஷ்டையில் இருந்து கொண்டு, என்ன பண்ணி
னாலும் பொருட்படுத்தாமல், சாந்த ஸமாதியில் சாகாமற்
கிடந்தவர்கள் எத்தனையோ பேர். அவர்களை நாம் பிரத்திய
க்ஷமாகவும் பார்க்கிறோம். புஸ்தகங்களின் மூலம் ஸதாசிவ
பிரம்மேந்திரர்கள், பட்டினத்தார் முதலியவர்களைப் பற்றிக்
கேட்டிருக்கிறோம். இவ்வளவு அனுபவிகள் மற்ற மதங்களில்
மிகவும் குறைவு. இத்தகைய மதத்திற்குப் பிரமாண க்ரந்தங்கள்
இல்லாமலா போகும்?



## மதம் எதற்கு?

மதம் எதற்கு? ஒரு மதகுரு சொல்லுவதை நாம் ஏன்
கேட்கப் போகிறோம்? நமக்குக் கஷ்டம் போவதற்காகவும்
குறை நீங்குவதற்காகவும் போகிறோம். குறையில்லா விட்டால்
வேண்டியதில்லை. குறை அதிகமானால் அதிகமாகக் கோயிலுக்
குப் போகிறோம்; அதிகமாகப் பெரியவர்களைத் தரிசிக்
கிறோம்; உபதேசம் கேட்கிறோம். குறையில்லா விட்டால்
உபதேசம் வேண்டாம். நமக்குள்ள ஸந்தேஹங்களையும் கஷ்டங்
களையும் போக்கிக் கொள்வதற்காக நாம் பெரியவர்களிடம்
போகிறோம்; புஸ்தகங்களை வாசிக்கிறோம்; நல்லவர்களிடம்
உபதேசம் பெறுகிறோம்; மஹாக்ஷேத்திரங்களுக்குப்
போகிறோம்; தீர்த்த ஸ்நானம் செய்கிறோம். அப்படிச் செய்வ
தால் மனது கொஞ்சம் கொஞ்சமாகச் சாந்தி அடைகிறது.
முழுவதும் சாந்தி அடைந்தவர்கள் வெட்டினாலும் குத்தி
னாலும் பூஷித்தாலும் தூஷித்தாலும் ஆனந்தமாக இருக்கிறார்
கள். புஸ்தகம் வாசித்தல், குரு தரிசனம் செய்தல் முதலியவற்
றால் மற்றவர்களுக்கும் தற்காலிகமாகவாவது இந்தச் சாந்தி
ஏற்படுகிறது. எல்லா ஜாதிகளிலும் மஹான்கள் கிளம்புகிறார்
கள்; மனதில் சாந்தி அடைகிறார்கள். இந்தச் சாந்திக்குரிய

மார்க்கத்தைத்தான் 'மதம்' என்பது. இதன் இன்னொரு பேர் 'தர்மம்' என்று சொல்வார்கள். தர்மமானது சிரேயஸுக்கு ஸாதனம். அதுதான் மதம்!

தர்மம் என்பது பின்பு லோகத்திலேயே க்ஷேமமாக இருக்க வேண்டி அனுஷ்டிப்பது. பின்பு இது வேண்டும் என்ற ஆசையில்லாவிட்டால், லோகத்தில் க்ஷேமத்தை எதிர்பார்க்காமல் அனுஷ்டித்தால் அதுவே மோக்ஷத்தைத் தரும். அதுதான் மதம்.

மதத்தை 'தர்மம்' என்றே சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறது. வாழ்க்கை பூர்ணத்வம் அடைவதற்கான அறநெறிகள் என்னவோ அவைதான் 'தர்மம்' என்பது. அப்படிப்பட்ட தர்மம் என்ன என்று சொல்கிற நூல்கள் நமக்கும் இருக்கின்றன. நாம்தான் தெரிந்து கொள்ளாமல் இருக்கிறோம். தர்மத்துக்கு ஆதாரமான விஷயங்களைச் சொல்வதால், இந்த நூல்களுக்கு **தர்மப் பிரமாணங்கள்** என்று பெயர்.

பிரமாணம் என்றால் இதுதான் 'அதாரிட்டி'யானது, சரியானது, ஸத்தியமானது என்று நிலைநாட்டிச் சொல்வது. இப்படி, ஹிந்து மதம் என்று தற்போது வழங்குகிறதும், ஸனாதனமாக வேத காலத்திலிருந்து வந்திருப்பதுமான தர்மம் என்ன என்பதை எடுத்துச் சொல்கிற ஆதார நூல்கள், சாஸ்திரங்கள் பதினான்கு இருக்கின்றன.

தர்மம் அல்லது மதம் என்பதன் கொள்கை என்ன, அனுஷ்டானம் என்ன என்று ஸத்தியமாகத் தெரிவிக்கிறதுதான் தர்ம ப்ரமாண புஸ்தகங்கள். அவை இன்னதென்று நமது சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது:

**அங்கானி வேதாச் சத்வாரோ மீமாம்ஸா ந்யாய விஸ்தர:।**
**புராணம் தர்ம சாஸ்த்ரம் ச வித்யா ஹ்யேதாச் சதுர்தச**
**(மனு ஸ்ம்ருதி)**
**புராண-ந்யாய-மீமாம்ஸா-தர்ம சாஸ்த்ர-அங்க மிச்ரிதா:।**
**வேதா: ஸ்தானானீ வித்யானாம் தர்மஸ்ய ச சதுர்தச॥**
**(யாக்ஞவல்க்ய ஸ்ம்ருதி)**

'சதுர்தச' என்று இந்த இரண்டு ச்லோகங்களிலும் முடிவாக

வருகிறது. 'சதுர்தச' என்றால் பதினான்கு. நமக்குப் பிரமாண நூல்கள் பதினான்கு என்று இவற்றிலிருந்து தெரிகிறது. அறிவு இந்தப் பதினான்குக்குள் அடங்கியிருக்கிறது.

'வித்' என்றால் 'அறிவது' என்று அர்த்தம். நாம் ஸத்யமான தத்வத்தை அறியும்படியாகப் பண்ணும் அறிவு நூலே வித்யா. இப்படிப் பதினாலு இருப்பதுதான் இந்த இரண்டு ச்லோகங்களில் 'வித்யா ஹ்யேதாச் சதுர்தச' என்றும், 'வித்யானாம் தர்மஸ்ய ச சதுர்தச' என்பதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. அறிவு நூலுக்கு அறிவு நூல்; அற நூலுக்கு அற நூல். அதனால் தான் இந்தப் பதினாலும் வித்யா ஸ்தானம், தர்ம ஸ்தானம் என்ற இரண்டு பேரையும் பெற்றிருக்கின்றன: 'ஸ்தானானி வித்யானாம் தர்மஸ்ய ச சதுர்தச'. 'வித்' – அறிவது – என்றால், இங்கே கண்ட கண்ட விஷயத்தைத் தெரிந்து கொள்வது என்று அர்த்தமில்லை. ஸத்யத்தை அறிகிற ஞானமே 'வித்யா'வில் வரும் 'வித்'; 'வித்வான்' என்பதில் வரும் 'வித்'. Wit, Wisdom என்பதெல்லாம் இந்த ரூட்டிலிருந்து வந்தவை தான். 'வித்' – தாதுவிலிருந்தே 'வேதம்' என்பதும் வந்திருக்கிறது. வேதம் என்றால் நேர் அர்த்தம் Book of Knowledge என்று சொல்லலாம். அறிவைத் தருவதால் இந்தப் பதினான்குக்கும் வித்யாஸ்தானங்கள் என்று பெயர். 'அறிவிற்கு இருப்பிடம்' என்பது அதன் அர்த்தம். அறத்துக்கு இருப்பிடமான தால் தர்ம ஸ்தானமாக இருப்பதே இப்படி அறிவுக்கும் இடமாகியுள்ளது.



# 14 பிரமாண நூல்கள்

அந்தப் பதினான்காவன:- நான்கு வேதங்கள்; வேதங்களின் ஆறு அங்கங்கள்; அதோடு மீமாம்ஸை, நியாயம், புராணம், தர்மசாஸ்திரம் என்ற நான்கு.

வேதத்தைப் பற்றியும் ஆறு அங்கங்களைப் பற்றியும் reference-ஆவது கேட்டிருப்பீர்கள்.

'வேதமோ டாறங்க மாயினானை'
என்று தேவாரம் சொல்லுகிறது. நாலு வேதமும், ஆறு அங்கமுமான இந்தப் பத்தும் ஈச்வர ஸ்வரூபம் என்று அதில் சொல்லப்பட்டிருக்கிறது. இவை போக பாக்கி நான்கு: மீமாம்ஸை, ந்யாயம், புராணம், தர்மசாஸ்திரம்.

'சதுர்தசம்' என்றால் பதினான்கு. சதுர்-நான்கு; தசம்-பத்து. ஆகவே பதினான்கு தர்மப் பிரமாணங்களை 'சதுர்தச வித்யா' என்பார்கள். இந்தச் சதுர்தச வித்யைகளை நளன் கற்றுக் கொண்டான் என்று (நள சரித்திரமாகிய) 'நைஷத'த்தில் சொல்லி இருக்கிறது. அங்கே சிலேடையாக அந்த விஷயம் சொல்லப்படுகிறது. 'நளன் சதுர்தச வித்யைகளுக்குச் சதுர்தசை யைக் கொடுத்தான்' என்று வார்த்தை விளையாட்டுப் பண்ணி யிருக்கிறார் கவி! சதுர்-தசமான இந்தப் பதினான்கு வித்யை களுக்கும் நான்கு தசைகளை (சதுர்தசைகளைக்) கொடுத்தா னாம்! அந்த நான்கு தசைகள்: படிப்பது, படித்ததைப் புரிந்து கொள்ளுவது, படித்ததன்படி நடப்பது, மற்றவர்களை நடக்கச் செய்து என்பவை.

*சதுர்தசத்வம் க்ருதவான் குத: ஸ்வயம்*
*ந வேத்மி வித்யாஸு சதுர்தசஸ்வபி!!*

(நைஷத காவ்யம், I)

இந்தப் பதினான்கு வித்யைகளிலே அறிவு அடங்கி இருக்கிறது.

இன்னும் நான்கு வித்யைகள் இருக்கின்றன. அவற்றையும் சேர்த்துக் கொண்டால் பதினெட்டாகும். அஷ்டாதசம் என்றால் பதினெட்டு. இந்த அஷ்டாதச வித்யைகளில் அடங்காதது ஒன்றுமேயில்லை. லோகத்திலுள்ள ஸகல வித்யைகளும் அவற்றுக்குள்ளே அடங்கிவிடும். இந்தப் பதினெட்டில் நேராக தர்மத்தைச் சொல்லுபவை முன்பு சொன்ன பதினான்குதான். மீதமுள்ள ஆயுர்வேதம், அர்த்த சாஸ்திரம், தனுர்வேதம், காந்தர்வ வேதம் ஆகிய நான்கும் நேராக தர்மத்தைச் சொல்வன அல்ல. ஆயினும் அவையும் அறிவு தருவதால் வித்யா ஸ்தானங்களாக மட்டும் உள்ளன. மேலே சொன்ன பதினாலோ தர்ம ஸ்தானம், வித்யா ஸ்தானம் இரண்டாகவும் இருப்பவை.

ஆத்ம லோகத்தில் இன்பத்தை அடைவதற்கு ஏற்பட்ட ஸாதனங்கள் இவை.

தர்ம ஸ்தானம், வித்யா ஸ்தானம் என்பதோடு இவற்றை எல்லாம் பொதுவில் 'சாஸ்திரம்' என்கிறோம். சாஸ்திரம் என்பதற்கு அர்த்தம் 'கட்டளையாக இடப்பட்டிருப்பது' என்பது. ராஜாங்க சாஸனம் என்கிறபோது, சாஸனம் என்றால் கட்டளை என்று அர்த்தம். தர்மபுத்திரருக்கு பீஷ்மர் தர்ம கட்டளைகளையெல்லாம் எடுத்துச் சொல்கிற பர்வத்துக்கு மஹாபாரதத்தில், 'அனுசாஸன பர்வா' என்றே பெயர். ஐயனார் என்பவரை சாஸ்தா என்று சொல்வது, அவர் உத்தரவு போட்டுப் பரமேச்வரனின் பூதகணங்களை எல்லாம் அடக்கி வைத்துக் கொண்டிருப்பதாலேயே! நம்மை ஒரு கட்டுப்பாட்டில், நெறியில் கொண்டு வந்து அடக்கி வைக்கிற கட்டளைப் புஸ்தகங்களே சாஸ்திரங்கள் எனப்படுபவை.

இந்தப் பதினாலும் நமக்கு ஆதார நூல்கள் என்றாலும், இவற்றில் வேதம்தான் தலைமையானது. மற்ற மதஸ்தர்கள் பைபிளை, குரானை, ஜெண்டவஸ்தாவை, த்ரிபிடகத்தை, க்ரந்த ஸாஹேபைத் தங்கள் மூல நூல் என்கிற மாதிரி நம் மதத்துக்கு எது என்றால், முக்கியமாக அது வேதம்தான்.

நாலு வேதத்தை மையமாகக் கொண்டு மற்ற பத்து

வித்யைகளும் ஏற்பட்டிருக்கின்றன. இந்தச் சதுர்தச வித்யை களுமே பூர்ணமாக நம் மதத்துக்கு சாஸ்திரங்களாகின்றன.



## பழைய பெருமையும், இன்றைய அவலநிலையும்

இந்தச் சதுர்தச வித்யைகளும் ஆதிகாலத்திலிருந்து வெள்ளைக்கார ஆட்சி ஏற்படுகிற வரையில் நம் தேசத்தில் போதிக்கப்பட்டு வந்திருக்கின்றன. இதிலே ஒரு ரஸமான சங்கதி சொல்கிறேன். ஃபாஹியான் என்றும் ஹுவான்(த்)ஸாங் என்றும் இரண்டு சீன யாத்ரீகர்கள், பல நூற்றாண்டுகளுக்கு முன் வெவ்வேறு சமயங்களில் இந்தியாவுக்கு வந்து சஞ்சாரம் செய்து, இங்கே தாங்கள் பார்த்ததை எல்லாம் எழுதி வைத்திருக்கிறார்கள் என்று உங்களுக்குச் சரித்திர புஸ்தகங்களிலிருந்து தெரிந்திருக்கும். இவர்கள் நாளந்தா, தக்ஷசீலம் ஆகிய இடங்களிலிருந்த பெரிய பெரிய வித்யாசாலைகளைப் பற்றிக் கொண்டாடி எழுதியிருக்கிறார்கள். புதைபொருள் ஆராய்ச்சியிலிருந்தும் இந்தப் பழைய யூனிவர்ஸிடிகளைப் பற்றித் தெரிகிறது. இவை முக்கியமாக மிகவும் பிரகாச நிலையில் இருந்தது, பௌத்த மதம் செழிப்பாக இருந்த காலத்தில்தான். ஆனால் இவற்றில் என்ன பாடத்திட்டம் (Syllabus) இருந்தது என்று பார்த்தால், சதுர்தச வித்யைதான்! புத்தமதப் புஸ்தகங்களையும் சொல்லிக் கொடுத்தார்கள். ஆனால் முதலில் வைதிக ஹிந்து மதத்தின் இந்த ஆதாரப் புஸ்தகங்களைச் சொல்லிக் கொடுத்துவிட்டு அப்புறம்தான் புத்தமத நூல்களைப் போதித்திருக்கிறார்கள். அறிவு, அறம் இரண்டும் விருத்தியாவதற்கு இந்த வைதிகமான சாஸ்திரங்கள் எந்த மதஸ்தருக்கும் உதவுகின்றன என்பதாலேயே இப்படிச் செய்திருக்கிறார்கள். கல்விக்குக் கல்வி என்ற பேர் இருக்க வேண்டுமானால், இந்தப் பதினாலு வித்யைகளும் தெரிந்திருக்க வேண்டும் என்று பௌத்தர்களும் கருதியிருக்கிறார்கள்!

இங்கே நம் தக்ஷிணதேசத்தில் பார்த்தாலும், தமிழ் மன்னர்

கள் ஏற்படுத்திய கடிகா ஸ்தானம், வித்யா ஸ்தானம் எனப் பட்ட கலாசாலைகளில் சதுர்தச வித்யைகள் போதிக்கப்பட்டிருக்கின்றன. கடலூருக்கும் பாண்டிச்சேரிக்கும் நடுவே 'பாகூர்' என்ற இடத்தில் இருந்த வித்யா சாலை பற்றி கி.பி. 868-ம் வருஷத்தியச் செப்பேடுகள் ஐந்திலே குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதிலே சதுர்தச வித்யைகள் சொல்லிக் கொடுக்கப்பட்டதாக இருக்கிறது. இதே போல், விழுப்புரத்துக்கும், திண்டிவனத்துக்கும் நடுவில் உள்ள 'எண்ணாயிரம்' என்ற ஊரிலும் 340 மாணாக்கர்கள் படித்த ஒரு வித்யாசாலை இருந்ததாகவும், அங்கே இந்தப் பிராசீன சாஸ்திரங்களைச் சொல்லிக் கொடுத்த தாகவும் பதினோராம் நூற்றாண்டைச் சேர்ந்த முதலாம் ராஜேந்திர சோழனின் சாஸனம் ஒன்றிலிருந்து தெரிகிறது. இப்படிப் பல.

தமிழ் சரித்திரத்தை ரொம்பவும் ஆராய்ச்சி பண்ணி, அதைப் பற்றியே இப்போது கதைகள், நாவல்கள்கூட எழுத ஆரம்பித்திருந்தாலும், நான் விசாரித்துத் தெரிந்து கொண்ட மட்டில், தமிழ் மன்னர்கள் வேத சாஸ்திரங்களை ரொம்பவும் ஆதரித்துப் போஷித்தார்கள் என்பதை மட்டும் யாரும் எடுத்துச் சொல்வதாகத் தெரியவில்லை. Scientific Outlook (பட்ச பாதமில்லாமல், நடுநிலைமையாகச் சொல்வது) என்று பெரிதாகப் பேசுகிறார்கள்; ஆனாலும் வாஸ்தவத்தில் அப்படிக் காணோம்! வைதிகத்தை எதிர்த்துச் சண்டை போட்ட பௌத்தர்களே புத்தி வளர்ச்சிக்கும், தர்ம வளர்ச்சிக்கும் இந்தப் பதினாலு சாஸ்திரங்கள் அவசியம் என்று கற்றுக் கொடுத்திருக்கிறர்ர்கள் என்றால், இப்போது நம் ஊரில் ஆஸ்திகர்கள் என்று சொல்லிக் கொள்கிறவர்கள்கூட (இப்போது இவர்கள் வேத சாஸ்திரங்களை அபிவிருத்தி பண்ணாவிட்டால் போகட்டும்), எப்போதோ தமிழ் ராஜாக்கள் வேத சாஸ்திரங்களை ஆதரித்து விருத்தி பண்ணினதைக்கூடச் சொல்லக் கூடாது என்று வைத்துக் கொண்டிருக்கிறார்கள்!

ஆக, இப்போது நாம் இருக்கிற ஸ்திதி என்ன என்றால், 'உங்கள் வித்யைகள் என்ன?' என்று கேட்டால், சொல்லத் தெரியாதது மட்டுமில்லை. வித்யை என்றாலே என்ன என்று தெரியவில்லை. செப்படி வித்யை, மாந்திரீகம், Magic தான் வித்யை என்று நினைத்துக் கொண்டிருக்கிறோம்!

வித்யையும் கலையும் ஒன்றே. சந்திர கலை மாதிரி எப்போதும் வளர்ந்து கொண்டேயிருக்கிற அறிவுதான் கலா, கலை எனப்படுவது. இப்போது கலை என்றால் டான்ஸைத் தான் நினைத்துக் கொள்கிறோம்!

இப்படி நாம் இருக்கக்கூடாது; நம்மவரைக் கொஞ்சமாவது நம்மவராக்க வேண்டும் என்றே இந்தப் பதினாலு— அல்லது பதினெட்டு—வித்யைகளைப் பற்றிக் கொஞ்சம் சொல்லலாம் என்று உத்தேசம்; நிறையச் சொல்லவில்லை. பேராவது தெரியட்டும் என்று சிறிது சொல்கிறேன். அதனாலேயே சிரத்தை ஏற்படலாம்; மேலே தெரிந்து கொள்ள ஆர்வம் உண்டாகலாம்.

இந்தப் பதினாலிலே மீமாம்ஸை, வியாகரணம், சிக்ஷை, நியாயம் என்று சில விஷயங்களைச் சொல்லும்போது அலுப்பாக இருக்கலாம். இதனால் எல்லாம் என்ன பிரயோஜனம், வெறும் Knowledge (அறிவு) ஆக இருக்கிறதே தவிர, ஆத் 'மார்த்தமாக இல்லையே என்று தோன்றலாம். இப்போது நாம் தமாக இல்லையே என்று தோன்றலாம். இப்போது நாம் செய்கிறதெல்லாம் ஆத்மார்த்தமாகவா செய்கிறோம்? மணிக் கணக்காகப் பார்க்கிற நியூஸ் பேப்பரில் என்ன இருக்கிறது? அதிலே முழுசாக ஒரு பக்கம், இரண்டு பக்கம் 'ஸ்போர்ட்ஸ்' என்று போடுகிறான். ஏதோ தேசத்தில், எவனோ விளையாடினான் என்று போடுகிறான். அதனால் நமக்கு என்ன லாபம்? ஆத்மார்த்தமாகத்தான் லாபம் உண்டா? அன்றாட வாழ்க்கைக் காவது பிரயோஜனம் உண்டா? ஆனாலும் விழுந்து விழுந்து படிக்கிறீர்கள், இல்லையா! ஒரு நாள், நான் பாட்டுக்கு நல்ல மத்தியான வேளையில் ரோடோடு வந்து கொண்டிருந்தேன். ஒரு கடை வாசலில் ஏகப்பட்ட கூட்டம். ரேடியோவில் நியூஸ் சத்தம் போட்டுக் கொண்டிருந்தது. அதற்காகத்தான் இத்தனை கூட்டம் என்று தெரிந்தது. (நியூஸ்) என்னவோ ஏதோ என்று விசாரித்தேன். எங்கேயோ பதினாயிரம் மைலுக்கு அப்பால் ஒரு தேசாந்தரத்தில் நடக்கிற கிரிக்கெட் நியூஸ்தான் என்று பதில் சொன்னார்கள். இப்படியெல்லாம் இந்த லோக வாழ்க்கைக்குக்கூட பிரயோஜனம் இல்லாவிட்டாலும் பரவாயில்லை என்று, உங்களுக்குப் பிடித்த அனேக விஷயங்களுக்காகப் பொழுதையும், பணத்தையும், அறிவையும் செலவழிக்கிறீர்கள்

அல்லவா? சிரமப்படுகிறீர்கள் இல்லையா? இதையெல்லாம் விட நிச்சயம் பிரயோஜனப்படுகிற நம் வித்யைகளைப் பற்றியும் கொஞ்சம் தெரிந்து கொள்ளுங்கள் என்கிறேன். அவற்றிலே நேராக ஆத்மார்த்தமாகப் பலன் தருவதாகத் தோன்றாததும் கூட, அதிலே கொண்டுவிடுவதற்காக ஏற்பட்டதுதான். அறிவு வளர்ச்சிக்கு இதெல்லாம் அவசியம்; மனஸைப் பண்படுத்திக் கொள்ள இவை உதவுபவை. பகவான் கொடுக்கிற ஒரு செல்வம் நம் அறிவு என்பது. அதை நல்ல கல்வியாலும் ஆராய்ச்சியாலும் சாணை தீட்டித் தீக்ஷ்ணமாக்கிக் கொண்டால், அதற்கப்புறம் அதில் பரமாத்ம ஸத்யம் பளிச்சென்று ஸ்புரிப்பதும் சுலபமாகும். இப்படியே வாக்கு என்பதும் பகவத் பிரஸாதமாக மனுஷ்ய இனத்துக்கு மட்டுமே கிடைத்திருப்பது. அதைச் சரியாகப் பிரயோகிப்பதாலேயே பல க்ஷேமங்களை அடையலாம் என்பதால்தான் வாக்கைப் பற்றிய, சப்தத்தைப் பற்றிய வியாகரணம், நிருக்தம், சிக்ஷை முதலிய சாஸ்திரங்கள் தோன்றியிருக்கின்றன. இவை எல்லாவற்றையும் பற்றி ஓர் அடிப்படை அறிவு (Basic Knowledge) எல்லோருக்கும் இருக்க வேண்டும் என்று என் ஆசை. ஆதனால் நம் வித்யா ஸ்தானங்கள் ஒவ்வொன்று பற்றியும் சிறிது சொல்கிறேன்.

# வேதம்



## மதத்தின் மூலாதாரம் வேதமே

தர்மப் பிரமாணங்கள் பதினான்கில் பிரதானமானது வேதம். ரிக்-யஜுஸ்-ஸாமம்-அதர்வம் என்ற நாலு வேதங்களுந் தான் பதினான்கில் முதல் நாலாகும்.

பாக்கியுள்ள பத்தில் ஆறை வேதத்தின் அங்கம் என்றும், மிகுதியுள்ள நாலை உபாங்கம் என்றும் சொல்வார்கள்.

ஒரு மனிதன் என்றால், பல அங்கங்கள் இருக்கின்றன அல்லவா? இப்படியே வேதத்தை வேத புருஷன் (வேதமாதா என்றும் சொல்வதுண்டு) என்று உருவகப்படுத்தினால், அந்தப் புருஷனுக்கு ஆறு அங்கங்கள். இப்படி அங்கம் மாதிரி நேராக வேதத்தில் இருப்பவை என்று இல்லாவிடினும், வேத புருஷனுக் குத் துணை அங்கமாக இருக்கிற நாலும் உபாங்கங்கள். நேர் அங்கம் ஆறை ஷடங்கம் (ஷட்-ஆறு) என்பார்கள். இவை சிக்ஷை, வியாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம் (ஜோதி டம்), கல்பம் என்பவை. உபாங்கம் நான்கு. மீமாம்ஸை, நியாயம், புராணம், தர்ம சாஸ்திரம் என்பவை.

ஆகக்கூடி வேதம்தான் முக்கியம். வேதத்துக்கு அங்கம், வேதத்துக்கு உபாங்கம் என்பதால்தான் மற்ற பத்தும் வித்யை களாக, சாஸ்திரங்களாக அந்தஸ்துப் பெறுகின்றன. பதினெட்டு வித்யைகள் என்கிறபோது மிச்சமிருக்கிற ஆயுர் வேதம், அர்த்த சாஸ்திரம், தனுர் வேதம், காந்தர்வ வேதம் இவற்றுக்கும் உப-வேதங்கள் என்றே பெயர் இருப்பதிலிருந்து, வேத அடிப்ப டையில்தான் இவையும் உண்டானவை என்று தெரிகிறது.

அங்கம், உபாங்கம் இவற்றோடுகூட வேதத்தைக் கற்க வேண்டும். அதற்கு 'ஸ அங்க உபாங்க அத்யயனம்' என்று பெயர். இதுவே 'ஸாங்கோபாங்கம்' என்பது. இப்போது எந்த விஷயமாயினும், அரசியல் கட்சி விஷயமானாலுங்கூட, ஒருவர் அந்த விஷயத்தை அடியிலிருந்து நுனிவரை எல்லாப் பாயின்டு களையும் எடுத்துக் காட்டிப் பேசினால் 'ஸாங்கோபாங்கமாகப் பேசினார்' என்கிறோம் அல்லவா? இந்த 'ஸாங்கோபாங்கம்' என்ற சொல் பழைய சதுர்தச வித்யையைக் குறிப்பதுதான். அந்த வித்யாப்யாஸத்தை நாம் இப்போது அடியோடு மறந்து விட்டாலும், வழிவழியாக அந்தப் பயிற்சிமுறை நம் நாகரிகத் தோடு கரைந்து விட்டதால் இன்றைக்கும் பூர்த்தியாக ஒரு விஷயத்தை விளக்குவதானால் 'ஸாங்கோபாங்கமாக' என்று சொல்கிறோம். இதிலிருந்தே வேதம், அதன் ஆறு அங்கங்கள், நாலு உபாங்கங்கள் ஆகியவற்றின் அப்பியாஸமானது ஸாதாரண ஜனங்களுக்கும் தெரிகிற அளவுக்கு எவ்வளவு சிறப்பாக நம் தமிழ்நாட்டில் இருந்திருக்கிறது என்று புரிந்து கொள்ளலாம். அப்படியெல்லாம் இருந்தும், இன்று அவற்றின் பேர்கூடத் தெரியாத நிலைக்கு வந்துவிட்டதுதான் இன்னும் ஜாஸ்தி துக்கத்தைத் தருகிறது. இது இருக்கட்டும்.

வேதந்தான் பிரதானம்; மையமானது. அதை வைத்துத் தான் மற்றவை. நேரான தர்மப் பிரமாணம் நம் மதத்துக்கு எது என்றால், வேதம்தான்! அதுதான் நம் பைபிள், குரான், கிரந்த ஸாஹேப். இப்போது நான் இப்படி, அந்த மற்ற மத நூல்களின் பெயர்களை வேதத்துக்குச் சூட்டினாலும் வேதம்தான் அவை யாவற்றிலும் முந்தையது. அவை எல்லாமுங்கூட வேதத்தின் ஒரு சில தத்வங்களிலிருந்து உண்டானவைதான். எனவே வேதம் என்றால்தான் பிரமாணநூல் என்றே அர்த்தமாகி விட்டது. நான் இப்போது மாற்றிச் சொன்னாலும் பைபிளை யும், குரானையும்—மற்ற மதங்களின் ஆதார நூல்களையும்தான் —கிறிஸ்துவ வேதம், முஹம்மதியர் வேதம், ஸீக்கியர் வேதம், பார்ஸியர் வேதம் என்று சொல்கிற வழக்கம் இருக்கிறது. கிறிஸ்துவர்கள் நம் ஊரில் தங்கள் பைபிளை 'ஸத்ய வேதம்' என்றே சொல்கிறார்கள்.

வேதத்தைப் பற்றிச் சொல்வதென்றால், எங்கே ஆரம்பிப் பது, எங்கே முடிப்பது என்று மலைப்பாக இருக்கிறது.

அத்தனை விஸ்தாரமான மகிமை வாய்ந்தது அது.

ப்ரமாணம் வேதாச்ச என்று ஆபஸ்தம்ப தர்ம ஸூத்திரத்தில் சொல்லியிருக்கிற மாதிரி, எல்லாத் தர்மங்களுக்கும் மூலமான பிரமாணம் நாலு வேதங்களும்தான்.

மனு தர்ம நூல், மனு தர்ம நூல் என்று ஒன்றைத் தமிழ் தேசத்து மஹான்கள் ஆதிகாலத்திலிருந்து போற்றி வந்திருக்கிறார்கள். பாரத தேசம் முழுவதிலுமே நீதிகளை எடுத்துச் சொல்வதில் மனுவின் தர்ம சாஸ்திரம்தான் முதல் ஸ்தானம் பெற்றிருக்கிறது. தமிழ்நாட்டில் மனுநீதிச் சோழன் என்றே ஒருவன் மஹா நீதிமானாக இருந்து கொண்டு, தன் பிள்ளையின் தேர்ச் சக்கரத்தில் மாட்டிக் கொண்டு உயிரை விட்ட ஒரு கன்றின் தாய்ப்பசுவுக்கு நியாயம் வழங்குவதற்காக, அந்தப் பிள்ளையையே தேர்க்காலில் பலி கொடுத்தான் என்று கதை இருக்கிறது. தர்ம விஷயங்களுக்கு மனுநீதி சாஸ்திரந்தான் பிரமாணம் என்று வைத்துக் கொண்டிருக்கிறோம். ஆனால் இந்த மனு தர்மசாஸ்திரத்தில் என்ன சொல்லியிருக்கிறது? 'இந்த நூல்தான் தர்மத்துக்கெல்லாம் மூலாதாரம்' என்றா சொல்லியிருக்கிறது? இல்லை. 'வேதோ (அ)கிலோ தர்ம மூலம்'–ஸகல தர்மங்களும் மூலம் வேதந்தான்–என்றே மனு சொல்லியிருக்கிறார்.★ எல்லாக் காலத்துக்கும் பொதுவான சாச்வத தர்மங்களைச் சொல்வது வேதம்தான் என்று அவர் சொல்லி விட்டார்.

வேதம் எப்படிச் சொல்கிறதோ அப்படித்தான் செய்ய வேண்டும். அது சொல்வதை மீறக் கூடாது. ஏனென்றால், அது தான் தர்மமூலம். யாராவது ஒன்றைச் சொல்லி அதை நாம் துளிக்கூட ஆக்ஷேபிக்காமல் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும் என்றால், 'அது என்ன வேதவாக்கோ?' என்று கேட்கிற வழக்கம் இன்றும் நம்மிடம் இருக்கிறது. அதாவது, வேத வாக்கு என்றால் எதிர்க் கேள்வி கேட்காமல் அதன்படி செய்துதான் ஆகவேண்டும் என்று அத்தனை பொது ஜனங்களும் நம்பி வந்ததைத்தான் 'வேத வாக்கோ?' என்று கேட்கிற வழக்கு நிரூபிக்கிறது. இப்படி எத்தனையோ ஆயிரம் வருஷங்

★ மனு தர்ம சாஸ்திரம் II. 6

களாக அதுதான் நமக்குப் பெரிய சட்டமாக இருந்திருக்கிறது. அதனாலேயே, வைரம் பாய்ந்த மரம் என்கிறோமே, அது மாதிரி, வேதம் வைரம் பாய்ந்ததாக இருக்கிறது. அனாதியாக வந்து கொண்டிருக்கும்படியான சட்டப் புஸ்தகம் அது.



# அனாதி, அபௌருஷேயம்

அனாதியாக என்றால் என்ன அர்த்தம்? வேதத்துக்குக் காலமே சொல்ல முடியாது; அதற்கு முந்தையதாக, அதற்கு ஆதியாக எதுவும் இல்லை என்பதுதான் 'அனாதி' என்ற வார்த்தைக்கு அர்த்தம். அப்படியானால் அது என்றுமே இருந்திருக்கிறது என்று அல்லவா அர்த்தமாகும்? இப்படிச் சொன்னால் எப்படிப் பொருந்தும்? ஒரு புஸ்தகம் என்றால் அதை ஒருவரோ பல பேரோதான் எழுதியிருப்பார்கள். 'ஓல்ட் டெஸ்ட்மென்டில்' பல ப்ராஃபெட்கள் சொன்னதைச் சேர்த்துப் போட்டிருக்கிறது. 'ந்யூ டெஸ்ட்மென்டி'ல் கிறிஸ்துவின் உபதேசங்களைச் சொல்லியிருக்கிறது. முகமது நபி சொன்னதைக் குரான் தெரிவிக்கிறது. இவர்கள் யாவரும் ஏதோ ஒரு காலத்தில் இருந்தவர்கள்தான். அவர்களுக்கு முந்தி அந்த உபதேசம் இல்லை. இப்படியே வேதத்தையும் யாரோ ஒருத்தரோ, பல பேரோ எழுதியிருக்க வேண்டும். அவர்கள் ஒவ்வொரு காலத்தில் இருந்திருப்பார்கள். அது ரொம்ப ரொம்ப முந்தைய காலம், பதினாயிரம் வருஷத்துக்கு முந்தைய காலம், அல்லது லக்ஷம், பத்து லக்ஷம் வருஷத்துக்கு முந்தைய காலம் என்று வேண்டுமானாலும் இருக்கட்டும். ஆனாலும் 'அனாதி' என்று சொல்லி விட்டால் தப்புத்தானே? அந்தப் பத்து லக்ஷம் வருஷத்துக்கு முந்தி வேதம் இல்லாமல்தானே இருந்திருக்க வேண்டும்?

இந்த மாதிரிக் கேள்விகள் எழும்புகின்றன.

வேதங்களை யாரோ மனுஷ்யர்கள் எழுதினார்கள் என்றால்

இப்படிக் கேட்பது நியாயம்தான். அதை அனாதி–ஆதியற்றது –என்பது தப்புத்தான். ஆனால் இது சரிதானா?

சரியாகத்தானே இருக்க வேண்டும்? ஒரு புஸ்தகம் என்றால் அதை யாரோ மனுஷ்யர்கள்தான் எழுதியிருக்க வேண்டும். அவர்கள் ஏதோ ஒரு காலத்தில்தான் தோன்றியிருக்க வேண்டும். அதனால் அனாதி என்பது சரியில்லைதான்–இப்படித் தோன்று கிறது.

வேதத்தை ரிஷிகள் என்ற மனுஷ்யர்கள் பண்ணினார்கள் என்றுதான் நாம் நினைத்துக் கொண்டிருக்கிறோம். நாம் படித்த சரித்திர புஸ்தகத்தில் அப்படித்தான் போட்டிருக்கிறது. அதில் போட்டிருப்பது மட்டுமில்லை.

வேதம் என்பது பல ஸூக்தங்களைக் கொண்டது. ஞானஸம்பந்தரின் தேவாரம் என்றால் அதில் பல பதிகங்கள் இருக்கிற மாதிரி வேதத்தில் பல ஸூக்தங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு பதிகத்திலும் பத்துச் செய்யுள்கள் இருக்கிற மாதிரி, ஒவ்வொரு ஸூக்தத்திலும் பல மந்திரங்கள் இருக்கின்றன. ஸு+உக்தம் என்பதே 'ஸூக்தம்'. 'ஸு' என்றால் 'நல்ல' என்று அர்த்தம். 'ஸுகுணம்', 'ஸுலோசனா' என்றெல்லாம் சொல் கிறோம் அல்லவா? 'உக்தம்' என்றால் 'சொல்லப்படுவது', அதாவது வாக்கு. ஸூக்தம் என்றால் நல்லவாக்கு என்று அர்த்தம்.

சாஸ்திரோக்தமாக வேதத்தைச் சொல்கிறபோது, அதிலிருக் கிற ஒவ்வொரு ஸூக்ததத்துக்கும் இன்னார் ரிஷி, அது இன்ன மீட்டரில் (சந்தஸ்) இருக்கிறது, அது இன்ன தேவதையைக் குறித்தது என்று சொல்லி விட்டுத்தான் ஆரம்பிக்கிறோம். இப்படி அனேகம் ரிஷிகளின் பெயர்களிலேயே வேத மந்திரங் கள் இருப்பதால், இந்த ரிஷிகள்தான் இவற்றைப் பண்ணி யிருக்க வேண்டும் என்று நினைக்கிறோம். ஒவ்வொரு ரிஷியும் இன்னார் பிள்ளை, இன்ன கோத்திரம் என்று அவர்களுடைய மூதாதைகளைக் குறிப்பிட்டுச் சொல்லியிருக்கிறது. 'அகஸ்த்யோ மைத்ராவருணி:' என்றால், மித்ரா வருணர்களின் பிள்ளையான அகஸ்தியர் என்று அர்த்தம். ''மதுச்சந்தா வைச்வாமித்ர:'' என்றால், விச்வாமித்ர கோத்திரத்தில் வந்த மதுச்சந்த ரிஷி என்று அர்த்தம். இப்படி ஒவ்வொரு ரிஷியின்

பேரில் மந்திரங்கள் இருக்கின்றன என்றால், அகஸ்தியர் பேரில் இருப்பது அவரது தகப்பனாரான மித்ரா வருணர்கள் காலத்தில் இல்லை, மதுச்சந்தரின் பேரில் இருப்பது விச்வாமித்ரர் காலத்தில் இல்லை என்றுதானே அர்த்தமாகும்? அப்படியானால் அனாதி என்பது சரியில்லைதானே?

இப்படியெல்லாம் கேட்கிறபோது, ஒவ்வொரு ரிஷியின் பேரில் வேத மந்திரங்கள் இருப்பதால் அந்த ரிஷியே அதைச் செய்தார், இயற்றினார், compose பண்ணினார் என்று தப்பாக நினைத்து விடுகிறோம். **உண்மையில் அந்த ரிஷிகள் மந்திரங்களைத் தாங்களே இயற்றவில்லை!**

வேதத்துக்கு 'அபௌருஷேயம்' என்றுதான் லக்ஷணம் சொல்லியிருக்கிறது. ஒரு புருஷன் அல்லது மனுஷ்யன் செய்திருந்தால் அது பௌருஷேயம். எந்த மனிதருமே செய்யாததனால் வேதம் அபௌருஷேயம். ரிஷிகள் இயற்றியிருந்தாலும் அது பௌருஷேயமாகிவிடும். ஆனால் அபௌருஷேயம் என்பதால் ரிஷிகளும் வேத மந்திரங்களைப் பண்ணவில்லை என்று ஆகிவிட்டது. மந்திரங்களை ரிஷிகள் இயற்றியிருந்தால் அவர்களுக்கு 'மந்த்ரகர்த்தா' என்றே பெயர் இருக்கும். ஆனால் வாஸ்தவத்தில் அவர்களுக்கு 'மந்த்ரத்ரஷ்டா' என்றுதான் பெயர் இருக்கிறது. இதற்கு '**மந்திரங்களைக் கண்டவர்கள்**' என்றே அர்த்தம்; செய்தவர்கள் என்று அர்த்தமில்லை.

கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டுபிடித்தார் என்றால் என்ன அர்த்தம்? அமெரிக்காவை அவரா உண்டு பண்ணினார்? இல்லை. ஏற்கெனவே இருந்த அமெரிக்காவை அவர் உலகுக்குத் தெரியும்படியாகப் பண்ணினார். இப்படியேதான் நியூட்டன், ஐன்ஸ்டீன் முதலிய எந்த விஞ்ஞானியும் புதுசாகச் சொல்கிற விதிகளை அவர்கள் செய்யவில்லை. நியூட்டன் சொல்லித்தானா ஒரு வஸ்துவை எறிந்தால் அது பூமியில் விழுகிறது? இல்லை! ஏற்கெனவே இருக்கிற விதிகளை இவர்கள் புரிந்துகொண்டு லோகத்துக்குத் தெரிவித்தார்கள். அதே மாதிரி ஏற்கெனவே இருந்த மந்திரங்களைத்தான் அத்தனை ரிஷிகளும் கண்டுபிடித்து லோகத்துக்குக் கொடுத்தார்கள். அந்த மந்திரங்கள் இவர்களுடைய அப்பா, தாத்தா காலத்துக்கும், அதற்கும் முந்தியுங்கூட இருக்கத்தான் செய்தன. ஆனால்

அப்போது அவை உலகுக்குத் தெரியவில்லை. இவர்கள்தான் அவற்றைக் கண்டுபிடித்தார்கள். அதனால் இவர்கள் பேரி லேயே அவற்றைச் சொல்வது வழக்கமாகி விட்டது. ஒருத்தன் புஸ்தகம் எழுதுகிறான்; இன்னொருவன் பப்ளிஷ் பண்ணு கிறான். ஒருத்தன் ஸினிமா எடுக்கிறான்; இன்னொருத்தன் ரிலீஸ் பண்ணுகிறான். இப்படி மந்திரங்களை லோகத்துக்கு வெளியிட்டவர்கள் மட்டுமேதான் ரிஷிகள். ஏற்கெனவே அவை இருந்தாலும், நமக்குப் பிரயோஜனமாகிறபடி வெளிப் படுத்திப் பரம உபகாரம் பண்ணினது ரிஷிகள்தான். அதனால் அவர்கள் பேரைச் சொல்லி நமஸ்காரம் பண்ணுவது நியாயம் தான்.

ரிஷிகள் மந்திரங்களைக் கண்டார்கள் என்றால், அதற்கு முந்தி அவை எங்கே இருந்தன? அனாதி என்றால் சிருஷ்டியின் போதே அவையும் தோன்றினவா? மனுஷ்யர்கள் தோன்று முன்பே தோன்றி விட்டனவா? எப்படித் தோன்றின? இவர்கள் கண்டுபிடிக்கிற வரையில் எங்கே இருந்தன?

வேத மந்திரங்கள் சிருஷ்டியின் ஆரம்பத்தில் தோன்றின என்றால் பரமாத்மா லோகத்தை சிருஷ்டி பண்ணுகிறபோதே இதையும் தாமே பண்ணிவிட்டார் என்று அர்த்தமாகும். பரமாத்மாவே வேதங்களை எழுதி எங்கேயாவது போட்டு விட்டாரா? அப்புறம் ஒவ்வொரு ரிஷியும் அதில் ஒவ்வொரு பாகத்தைக் கண்டெடுத்தார்களா? ஆனால் இப்படிச் சிருஷ்டி யின் ஆரம்பத்திலேயே வேதம் இருந்ததாகச் சொன்னால்கூட அது அனாதியாகிவிடாது. ஏனென்றால் இப்போதிருக்கிற பிரம்ம சிருஷ்டி எப்போது உண்டாயிற்று என்பதற்கே கணக்கு இருக்கிறது. க்ருதயுகம், த்ரேதாயுகம், த்வாபரயுகம், கலியுகம் என்று ஒவ்வொன்றுக்கும் இத்தனை வருஷங்கள் என்று சொல்லியிருக்கிறது. இம்மாதிரி ஆயிரம் சதுர்யுகம் கொண்டது பிரம்மாவுக்கு ஒரு பகல்; ஆயிரம் சதுர்யுகம் ஓர் இரவு. இந்தக் கணக்குப்படி அவருக்கு இப்போது ஐம்பது வயசுக்கு மேல் ஆகிவிட்டது என்று திருத்தமாக இன்றைய வயசைச் சொல்லி யிருக்கிறது. எந்தக் கர்மாவுக்கும் சங்கல்பம் செய்து கொள்ளும் போது, ஒரு பத்திரம் எழுதினால் அதில் தேதி போடுகிற மாதிரி, அன்றைய தினத்தைப் பற்றிச் சொல்லியாக வேண்டும். இப்படிச் சொல்லும்போது, பிரம்மாவின் இத்தனாம் வயசில்,

இத்தனாம் மாசத்தில், இன்ன பக்ஷத்தில், இன்ன நாளில், இன்ன யாமத்தில் என்று சொல்கிறோம். இதிலிருந்து என்ன ஏற்படுகிற தென்றால் சிருஷ்டி கர்த்தாவான பிரம்மா எப்போது உண்டா னார் என்பதற்கே கால வரையறை இருக்கிறது! இத்தனை கோடி கோடி வருஷங்களுக்கு முந்திப் பிரம்மா உண்டானார் என்றால் அவரே அனாதியில்லை. அதனால் அவரால் உண் டான லோக சிருஷ்டியும் அனாதியில்லை. சிருஷ்டியே அனாதி யில்லை என்று சொல்லி விட்டு வேதம் அநாதி என்றால் என்ன அர்த்தம்?

சிருஷ்டி தோன்றுவதற்கு முன்பும் பரமாத்மா இருந்தார்; பிரம்மா இல்லை. ஆனால் பிரம்மம் என்று சொல்லப்படுகிற பரம்பொருள் அல்லது பரமாத்மா எப்போதுமே இருந்திருக் கிறது. அதுதான் அனாதி. பிரபஞ்சம், ஜீவ ஜந்துக்கள் எல்லாம் அதிலிருந்துதான் உண்டாயின. பரமாத்மா தாமே நேரே இவற் றைப் பண்ணாமல் பிரம்மா மூலமாகப் பண்ணினார். விஷ்ணு மூலமாகப் பரிபாலித்தார். ருத்ரன் மூலம் ஸம்ஹாரம் பண்ணி னார். அப்புறம் அந்தப் பிரம்ம, விஷ்ணு ருத்ரர் எல்லாரையுங் கூட ஸம்ஹாரம் பண்ணி விடுகிறார். இதனால்தான் பிரம்மா வுக்கும் ஆயுஸ் சொல்லியிருக்கிறது. இப்போதிருக்கிற பிரம்மா வுக்கு நூறு வயஸானபின் அவர் பரமாத்மாவோடு சேர்ந்து விடுவார்; அவர் ஆயுஸ் முடிந்துவிடும். மறுபடி இன்னொரு பிரம்மா வருவார். அவர் மறுபடியும் சிருஷ்டியை ஆரம்பிக்க வேண்டும். இம்மாதிரி இன்னொரு பிர்ம்மாவை உண்டு பண்ணுவதற்கு முந்தியே பரமாத்மா வேதங்களை உண்டு பண்ணி விடுவாரா?

சிருஷ்டிக்கு முந்தியே வேதம் இருந்தது என்று சாஸ்திரங்க ளிலிருந்து தெரிகிறது. ஏனென்றால், பிரம்மாவே வேத மந்தி ரங்களைக் கொண்டுதான் சிருஷ்டியே செய்தார் என்று சொல் லியிருக்கிறது. வெறும் சப்தங்களேயான மந்திரத்தைக் கொண்டு சிருஷ்டி பண்ணினார் என்றால் என்ன என்று பிறகு சொல்கிறேன். இங்கே சொல்ல வந்தது, ரிஷிகளுக்கு முந்தி, லோகமே ஏற்படுவதற்கும் முந்தி, வேதங்கள் இருந்தன என்பது தான். பிரம்மாவே வேதங்களின் உதவி கொண்டுதான் சிருஷ்டி பண்ண முடிந்தது என்று பாகவதாதி புராணங்களில் ஸர்க(சிருஷ்டி) வர்ணனை பண்ணும் இடங்களில் சொல்லி

யிருக்கிறது.

இதனால்தான் வேதத்தை அனாதி என்கிறார்களா? வேதம், ஈச்வரன் என்ற இரண்டுமே அனாதி என்றால் இப்படி அர்த்தம் பண்ணிக் கொள்ளலாமா? யோசித்துப் பார்த்தால் இதுவும் தப்புதான்! சிருஷ்டி தோன்றா விட்டாலும், ஈச்வரன் வேதத்தை உண்டு பண்ணினார் என்று சொல்லி விட்டாலே அது உண்டாகாத ஒரு காலமும் உண்டு என்று அர்த்தமாகும். லோகமும் ஜீவ ஜந்துக்களும் சிருஷ்டியாகா விட்டாலும், பரமாத்மாவிடம் காலம் என்ற தத்துவம் உண்டான பிற்பாடுதான் வேதம் உண்டாயிற்று என்று அர்த்தமாகிவிடும். அதாவது அது அனாதி என்பது பொய்யாகிவிடும்.

வேதமும் அனாதி, ஈச்வரனும் அனாதி என்றால் இதை அவரும் பண்ணியிருக்கக் கூடாது. ஈச்வரன் வேதத்தை உண்டு பண்ணினார் என்றால் அது ஆதியுடையதாகிவிடும். ஈச்வரனிலிருந்து தோன்றியதுதான் ஸகலமும். அவருக்குப் புறம்பாக எதுவுமே கிடையாது. ஆகையால் வேதம், ஈச்வரன் என்று இரண்டு அனாதிகள் இருந்தன என்றாலும் தப்பு. இப்படி ஒரே குழப்பமாயிருக்கிறது!

ஈச்வரனாலும் பண்ணப்படாமல், ஈச்வரனுக்குத் தனியாகவும் இல்லாமல், வேதம் அனாதியாக இருக்க வேண்டும் என்றால் அது எப்படி?

இந்தப் பெரிய ஸந்தேஹத்துக்கு வேதமே பதில் சொல்லியிருக்கிறது. வேதத்தில் ஒரு பகுதியான ப்ருஹதாரண்யக உபநிஷத்தில் (II.4.10) 'ரிக்-யஜுஸ்-ஸாம-அதர்வ வேதங்கள் ஈச்வரனின் சுவாஸமாகும்' என்று சொல்லியிருக்கிறது. 'நிச்வஸிதம்'—மூச்சுக்காற்று—என்ற வார்த்தையே இந்த இடத்தில் போட்டிருக்கிறது.

நமக்கு ச்வாஸமில்லாவிடில் நாம் உயிரோடு இருக்க முடியுமா? முடியாதல்லவா? அப்படித்தான் பரமாத்மாவுக்கு உயிராக இருக்கிற ச்வாஸமே வேதம். அனாதியான அவர் என்றென்றும் உயிரோடு இருந்திருக்கிறார் என்பதால், வேதமும் அவருடனேயே, அவரது ச்வாஸமாக, அனாதியாக இருந்திருக்கிறது என்று ஆகிவிடுகிறது!

இதிலே கவனிக்க வேண்டிய விஷயம், ஈச்வரனைக்கூட வேதத்தை உண்டாக்கினவர் என்று சொல்கிற வழக்கமில்லை. நம்முடைய ச்வாஸத்தை நாம் உண்டாக்கினதாகச் சொன்னால் தப்புத்தானே? நாம் எப்போதிலிருந்து இருக்கிறோமோ அப் போதிலிருந்து ச்வாஸமும் இருக்கத்தானே செய்கிறது? இப்படி யேதான் ஈச்வரனும் வேதமும். அவரும் அதைப் பண்ணினார் என்று சொல்ல முடியாது.

வேதங்களுக்குப் பாஷ்யம் (விரிவுரை) எழுதிய வித்யா ரண்ய ஸ்வாமிகள், தம் குருவையே ஈச்வரனாகப் பாவித்து ஸ்தோத்திரம் பண்ணும்போது,

*யஸ்ய நி:ச்வஸிதம் வேதா:*

என்கிறார்[1]. 'எவருக்கு வேதங்கள்தான் சுவாஸமோ' என்று அர்த்தம். உபநிஷத்தில் போட்ட அதே 'நிச்வஸிதம்' இங்கே யும் வந்திருக்கிறது. வேதத்தைப் பண்ணினார் என்று இங்கே யும் இல்லை.

பகவானும் கீதையில் சொல்கிறபோது,[2] 'நானே எல்லா வேதங்களாலும் அறியப்படுகின்றவன் (வேதைச்ச ஸர்வை: அஹம் ஏவ வேத்ய:)' என்று சொல்லிவிட்டுத் தன்னை 'வேத க்ருத்' (அதாவது வேதத்தைப் பண்ணினவன்) என்று சொல்லிக் கொள்ளாமல், ''வேதாந்த க்ருத்' என்றே, அதாவது வேதங் களுக்கு முடிவான தத்வத்தை உண்டு பண்ணினவன் என்றே சொல்லிக் கொள்கிறார். தன்னை வேதம் அறிந்தவனாக (வேத வித்தாக)ச் சொல்லிக் கொள்கிறாரே அன்றி 'வேத க்ருத்' என்று சொல்லவில்லை. வேதாந்தம் என்கிற தத்வ ரூபத்தில் ஜீவர்களுக்குப் பிரயோஜனமாகப் பிரகாசிப்பதற்கு முந்தியே, ஜீவ சிருஷ்டிக்கு முன்னாலுங்கூட சப்த ரூபத்தில் இந்த வேதங் கள் ஈச்வரனோடு ஈச்வரனாக, அவனது மூச்சாக இருந்திருக் கின்றன.

கீதையில் சொன்ன மாதிரியே பாகவதத்திலும் வேதங் களைப் பகவான் பண்ணினதாகச் சொல்லவில்லை. அவரு

---

1. ஜீவன்முக்தி விவேகம், முதல் ச்லோகம்
2. XV.15

டைய ஹ்ருதயத்தில் வேதங்கள் ஸ்புரித்ததாகத்தான் சொல்லி யிருக்கிறது. ஏற்கெனவே உள்ள ஒரு ஸத்தியம் நமக்குள் தானாகப் பளீரென்று வெளிப்படுவதுதான் ஸ்புரணம் என்பது. இல்லாத ஒன்றைப் புதிதாகப் பண்ணினால் அதை 'ஸ்புரித்தது' என்று சொல்ல முடியாது. 'ஸகல மந்திரங்களையும் கண்டு கொண்ட ஆதிரிஷி பிரம்மா. அவருக்குப் பரமாத்மாதான் இவற்றைக் காண்பித்துக் கொடுத்தார். எப்படி? வாயினால் சொல்லி உபதேசம் பண்ணினாரா? இல்லை. ஹ்ருதயத்தினால் வேதங்களைக் கொடுத்தார்'–'தேனே ப்ரஹ்ம ஹ்ருதாய ஆதி கவயே' என்று பாகவதத்தின் முதல் ச்லோகம் சொல்கிறது. அத னால் பரமாத்மாவின் ஹ்ருதயத்தில் எப்போதுமே வேதம் இருந்து கொண்டிருக்கிறது, அதை அவர் இயற்றவில்லை என்று தெரிகிறது. அவர் சங்கல்பம் பண்ணின மாத்திரத்தில் பிரம்மா வுக்கு அத்தனை வேதங்களும் தெரிந்து விட்டன. அந்தச் சப்தங் களை வைத்துக் கொண்டு அவர் ஸ்ருஷ்டி பண்ண ஆரம்பித்து விட்டார்.

தேவாரம் ஈச்வரனை 'வேதியா, வேதகீதா' என்கிறது. 'சந் தோக ஸாமம் ஓதும் வாயானை', 'பௌழியன் காண்' என்று வேதசாகைகளின் (வேதக் கிளைகளின்) பெயர்களைச் சொல்லி, அவற்றைப் பகவான் பாடிக் கொண்டிருக்கிறான் என் கிறது. பாடுகிறான் என்றால் என்ன? மூச்சு விடுவதே பெரிய பாட்டுத்தான். நாம் விடுகிற மூச்சை 'ஹம்ஸ கீதம்' என்று சொல்லியிருக்கிறது. இப்படி ஈச்வரனுடைய ச்வாஸ ஸங்கீத மாக இருப்பதுதான் வேதம். ஈச்வரன் பூணூல் போட்டுக் கொண்டு, விபூதி இட்டுக் கொண்டு, ஓயாமல் ஸ்நானம் பண் ணிக் கொண்டு, வேதத்தைச் சொல்லிக் கொண்டே இருக்கிறார் என்று தேவாரம் சொல்வதைப் பார்த்தால், பரமசிவன்தான் பெரிய கனபாடிகள் என்று தோன்றுகிறது! 'பவளம் போல் மேனியில் பால் வெண்ணீரும்', 'வெண்ணூல் உண்டே, ஓதுவ தும் வேதமே' என்றெல்லாம் அப்பர் ஸ்வாமிகள் வர்ணிக் கிறார்! இங்கேயும், 'வேதம் ஓதுகிறார்', 'வேதம் இசைக் கிறார்', என்றுதான் இருக்கிறதே தவிர, வேதத்தை இயற்று கிறான் என்று ஓரிடத்தில்கூட இல்லை.

வேதங்களைப் பற்றியும், வைதிகமான யாக, யக்ஞாதிக ளைப் பற்றியும் தேவாரத்தைப் போலவே வைஷ்ணவர்களின்

திவ்யப் பிரபந்தங்களிலும் நிறையச் சொல்லியிருந்தாலும், எத னாலோ பெருமாள் வேதம் ஓதுவதாக எங்கும் சொல்லியிருக் கிறதாக எனக்கு நினைவில்லை.

புகழேந்திப் புலவர், கஜேந்திர மோக்ஷத்தின்போது யானை 'ஆதிமூலமே' என்று அழைத்தவுடன் 'என்ன?' என்று கேட்டு வந்த மஹாவிஷ்ணுவை,

வேதத்தின் முன் நின்றான்; வேழம் முதலே என அழைப்ப என் என்றான் எங்கட்கிறை

என்று சொல்கிறார். இங்கே 'வேதத்தின் முன்' என்றதால், 'காலத்திலே வேதத்துக்கு முந்தி', என்று அவர் சொல்வதாக எனக்குத் தோன்றவில்லை. ஒருவர் வீட்டு வாசலில் நின்றால் 'வீட்டின் முன் நின்றான்' என்றுதானே சொல்வோம்? அப்படிச் சகல வேதங்களுக்கும் ஆரம்பத்தில் அவன் இருக்கிறான் என்பதையே 'வேதத்தின் முன் நின்றான்' என்று சொல்லியிருப்பார். இன்னொன்று தோன்றுகிறது. பெருமாள் புறப்பாடு எப்படி நடக்கிறது? முதலில் திருவாய்மொழி கோஷ்டிக்காரர்கள் வருகிறார்கள். அப்புறம் பெருமாள் (உத்ஸவர்) வருகிறார். அவருக்குப் பின்னால் வேத பாராயணக்காரர்கள் வருகிறார்கள். இங்கேயும் ஸ்வாமி வேதத்தின் முன்னே நிற்கிறார்!

வைஷ்ணவமான ஆகமங்களின்படியும், புராணங்களின்படியும் மஹாவிஷ்ணுவையே விசேஷமாக யக்ஞ ஸ்வரூபி, வேதஸ்வரூபி என்று சொல்லியிருக்கிறது; கருடனை வேத ஸ்வரூபம் என்றும், அதன்மேல் பகவான் இருப்பதாகவும் சொல்கிறதும் உண்டு. ஆனால் வேதத்தைப் படைத்ததாகச் சொன்னதாகத் தெரியவில்லை.

வேதத்திலேயே இருக்கப்பட்ட 'புருஷ ஸூக்தம்' ஒன்றில் தான் வேதங்கள் பிறந்தன (அஜாயத) என்ற வார்த்தையே வந்திருக்கிறது. ஆனால் 'புருஷ ஸூக்த'மானது ரொம்பவும் symbolical-ஆகவும், allegorical-ஆகவும் (உருவக அணி கொண்டதாகவும், ஆழ்ந்த உள்ளுறைபொருளைச் சம்பவம் போல் சொல்லுவதாகவும்) இருப்பதால், அதிலே, 'வேதம் பிறந்தது' என்று சொல்வதை அப்படியே நேர் அர்த்தம் பண்ணிக்

கொள்ள முடியாது. பரம புருஷனையே பசுவாகப் பலி கொடுத்த ஒரு யக்ஞத்தில்தான் ஸ்ருஷ்டியெல்லாம் உண்டா யிற்று என்று சொல்லி, அப்போதுதான் வேதங்களும் உண் டானதாக அதில் சொல்லியிருக்கிறது. பரம புருஷனை யக்ஞப் பசுவாகப் பலி கொடுப்பது என்றால் என்ன? அதை நேர் அர்த்தம் பண்ணிக் கொண்டால் சரியாகாது அல்லவா? இந்த யாகத்திலே வஸந்த காலத்தை நெய்க்குப் பதில் ஆஹுதியாக விட்டார்கள், கோடைக்காலம் ஸமித்துக் கட்டாயிற்று, சரத் காலம் ஹவிஸ் ஆயிற்று என்றெல்லாம் சொல்வதைப் புரிந்து கொள்ள முடிகிறதா? இதெல்லாம் மந்திர அர்த்தத்தைத் தியானம் பண்ணி, அதிலேயே ஊறினவர்களுக்குத்தான் அனுபவ ரூபத்தில் அர்த்தமாகும். நாம் வார்த்தைகளின் அர்த் தத்தை மட்டும் பார்த்துப் புரிந்து கொள்ள முடியாது. அத னால் வேதங்கள் பிறந்ததாக அதில் சொன்னதையும் அப்ப டியே பொருள் கொள்வதற்கில்லை!

மொத்தத்தில் சாஸ்திர அபிப்பிராயம், வேதம் அனாதி; அது அனாதியாக ஈச்வரனின் சுவாஸமாக இருக்கிறது என்பதுதான்.

ஈசுவரனின் சுவாஸம் இந்த மாதிரிச் சப்த ரூபத்தில் இருக் கிறது என்றால், இந்த சப்தங்களைக் கொண்டுதான் பிரம்மா சிருஷ்டி பண்ணினார் என்றால், நாகரிக மூளைக்கு 'இதெல் லாம் சுத்த நான்-ஸென்ஸ்' என்று தோன்றுகிறது!

நன்றாக ஆராய்ந்து பார்த்தால், பெரிய விஞ்ஞான உண் மையே இதில் இருக்கிறதென்று தெரிகிறது.

இப்படிச் சொல்லும்போது இன்றைய விஞ்ஞானத்துக்கு acceptable-ஆக (ஏற்புடையதாக) இருந்தால்தான் மத விஷயங் களை நாம் ஒப்புக் கொள்ளலாம் என்று நான் சொல்வதாக அர்த்தமில்லை. நம் ஸயன்ஸும், ஸயண்டிஸ்டுகளும் எங்கே போக முடியாதோ, அந்தப் பரமாத்ம தத்துவத்தைச் சொல்கிற வேதத்தை, ஸயன்ஸின் லிமிட்டுக்குள் கொண்டுவர வேண்டும் என்று நான் சொல்லவில்லை. அதிலுள்ள அனேக விஷயங்கள் ஸயன்ஸுக்கு ஒத்துவராமல்கூட இருப்பதாகத் தோன்றலாம். அதனால் அவை தப்பு என்று ஆகிவிடாது. ஆனால் இங்கே எடுத்துக் கொண்ட விஷயம்—மூச்சு . எப்படி சப்தக்கோவை களான மந்திரமாக இருக்க முடியும்? அதை வைத்துக் கொண்டு

எப்படி லோக ஸ்ருஷ்டி உண்டாக முடியும்? என்ற விஷயம்—ஸயன்ஸுக்கும் ஒவ்வியதாகவே இருக்கிறது என்று மட்டும் சொன்னேன்!



# ஒலியும் படைப்பும்

சப்தம் என்பது என்ன? Vibrationதான் (அதிர்வுதான்) என்று இன்றைய ஸயன்ஸில் சொல்கிறார்கள். அணு விஞ்ஞானமும், ஐன்ஸ்டீன் கொள்கையும் என்ன சொல்கின்றனவென்றால், 'அணுவுக்குள் புகுந்து பார்த்தால் எல்லா வஸ்துவும் ஒன்றுதான், அத்வைதம்தான். லோகமெல்லாம் ஒரே சக்தி வெள்ளம்தான். எல்லாம் ஒரே electro-magnetic (மின்-காந்த) பிரவாஹம்தான். ஆனால் ஏன் இப்படி வேறு வேறு வஸ்துக்களாகத் தெரிகிறது என்றால், அந்த ஒரே சக்தியில் தோன்றுகிற வெவ்வேறு விதமான vibrationகளால்தான்' என்று சொல்கின்றன.

அதிர்வு உண்டானால் சப்தம் உண்டாகிறது. இதையே திருப்பிச் சொன்னால், சப்தம் உண்டாக வேண்டுமானால் அதற்கான அதிர்வு ஏற்பட்டாக வேண்டும்.

ஒரே சக்தியில் பலவித Vibration ஏற்படுவதால் லோக சிருஷ்டி உண்டாவதாகச் சொல்கிற விஞ்ஞானக் கருத்தும், பரமாத்மாவின் சுவாஸமான வேத சப்தத்திலிருந்து லோகம் வந்தது என்பதும் முழுக்க ஒன்றேதான்!

மனுஷ்யர்கள், பிராணிகள் இருக்கிறோம். நம்முடைய ஆரோக்யம், உணர்ச்சிகள் முதலியன எப்படி ஏற்படுகின்றன? நம்முடைய ச்வாஸ கதியிலிருந்துதான். நாடிகளில் ச்வாஸம் போகிறபோது ஏற்படுகிற vibration-களால்தான் தேகத்தின் பல பகுதிகளுக்கும் ஆரோக்யம், அல்லது ஆரோக்யக் குறைவு ஏற்

படுகிறது. யோக ஸாதனங்களால், ச்வாஸப் பயிற்சி மூலம் மூச்சை நாடிகளில் ஒழுங்குபடுத்திக் கொள்கிறவர்களுக்கு ஆச்சரியப்படும்படியான ஆரோக்யம் இருக்கிறது. அவர்களுடைய ரத்தக் குழாய்களை நறுக்கினால்கூட ரத்தம் கொட்டாமலிருக்கிறது. நாடித்துடிப்பு, ஹ்ருதயத் துடிப்பு இவற்றைக் கூட நிறுத்திவிட்டு, அவர்களால் பூமிக்கடியில் உயிரோடு ஸமாதியில் இருக்க முடிகிறது. பாம்பும் தேளும் கடித்தாலும் விஷம் அவர்களைப் பாதிப்பதில்லை. மூச்சினால் உண்டாகும் நாடிச் சலனத்தை அவர்கள் ஒழுங்குபடுத்தியிருப்பதால்தான் இப்படி இருக்கிறது.

உடம்புக்கு மட்டும்தான் மூச்சு முக்கியம் என்றில்லை. மனஸுக்கும் மனஸின் ஆரோக்யத்திற்கும் அதுவே முக்யமாயிருக்கிறது. எண்ணங்களுக்கு மூலமான மனஸும், மூச்சுக்கு மூலமான பிராணசக்தியும் ஒன்றாகவே இருப்பதால்தான் இப்படியிருக்கிறது. நாடிச் சலனத்தாலேயே ஆரோக்யமான (நல்ல) அல்லது ஆரோக்யக் குறைவான (கெட்ட) எண்ணங்களும் உண்டாகின்றன. நீங்களே கவனித்துப் பார்த்தால் தெரியும். ஒரு தெய்வ ஸன்னிதானத்தில் அல்லது மஹானின் அருகில் மனஸ் சாந்தமாக இருக்கிறபோது மூச்சு எப்படிச் சஞ்சரிக்கிறது; காமத்தினால், கோபத்தினால் வேகம் உண்டாகிறபோது ச்வாஸகதி எப்படியிருக்கிறது என்று பார்த்தால், ஒன்றுக்கொன்று நிரம்ப வித்யாஸமாயிருக்கும். ஸந்தோஷம் என்பதிலேயேகூட தெய்வ விஷயமாக ஒரு பஜனையில் அல்லது உத்ஸவத்தில் உண்டாகிறதற்கும், இந்திரிய ஸுகத்தைத் தருகிற விஷயங்களில் உண்டாவதற்கும் நாடிச் சலனத்தில் வித்யாஸம் தெரியும். பொதுவாக உத்தமமான ஸந்தோஷத்தில் மூச்சு வலது நாசித்துவாரத்தில் வரும்; வெறும் இந்திரிய ஸந்தோஷம் (புலனின்பம்) என்றால் இடது நாசித் துவாரத்தில் வரும். இத்தனை உணர்ச்சிகளுக்கும் ஆதாரமான சாந்தமான ஸத்வஸ்துவில் தியானம் வலுவாகிறபோது, ஒரே சீராக, மிக மெதுவாக, இரு நாசிகளிலும் ஸமமாக மூச்சு வரும். தியான லக்ஷ்யத்தில் ஒன்றுபட்டுவிடுகிறபோது மூச்சே நின்றுவிடும். மனஸும் நின்றுவிடும். ஆனால் உயிர் இருக்கும். ஞானம் என்ற பேருணர்வு பூரித்து இருக்கும்.

ஆக, ஜீவன் என்று எடுத்துக் கொண்டால், அவனுடைய

ஜடமான சரீரம், சைதன்யமான அறிவு இரண்டும் ச்வாஸகதியால் உண்டாகி வளர்கிறவைதான்; அல்லது அழிகிறவைதான். முறையான ச்வாஸகதி என்பது நம் உள் vibration-களை ஒழுங்கு பண்ணிக் கொள்வதுதான்!

பரமாத்மாவிடமிருந்துதானே இத்தனை ஜட வஸ்துக்களும் சைதன்ய வஸ்துக்களும் தோன்றி விருத்தியாகின்றன? அழிவதும் வளர்வதுமாக இருக்கின்றன? இதற்கெல்லாம் ஏற்ற சலனங்கள் பரமாத்ம வஸ்துவில் ஏற்பட்டுத்தானே ஆகவேண்டும்?

பிரம்மம் நிர்குணமானது, சலனமற்றது என்கிற அத்வைதம் இருக்கட்டும். அந்த அத்வைதத்தின்படியும், இன்னதென்றே சொல்ல முடியாத (அனிர்வசனீயமான) மாயாசக்தியுடன் கூடி, பிரம்மம் பலவான இந்தப் பிரபஞ்சமாக வேஷம் போட்டுக் கொண்டிருப்பதாகச் சொல்லித்தானே இருக்கிறது? வேஷமோ, கீஷமோ, இப்படி ஜடமான லோகமென்றும், சைதன்யமுள்ள ஜீவர்கள் என்றும் விவகார தசையில் இருக்கிற மாதிரி ஒப்புக் கொள்ளத்தான் வேண்டியிருக்கிறது. மாயை என்று சொன்னாலும், அதற்கும் ஆதாரமான 'மாயின்' என்று ஈஸ்வரனேதான் இருக்கிறான். ஆகக்கூடி மாயாசக்தி என்று சொல்லிவிட்டாலும், இது அத்தனையும் பரப்பிரம்ம வஸ்துவில் தோன்றின சலனங்கள்தான்; Vibrationகள்தான்! இத்தனை சலனங்களாலும் அது சலனமடையாமல், உள்ளூற நிர்குண சாந்த வஸ்துவாகவே இருக்கிறது. ஆனாலும் நம் பார்வையில் சலனங்கள் உண்டுதான். அதுவும் கன்னாபின்னா என்று இல்லாமல் பெரிய பெரிய சூரியன் முதலான கிரஹங்களின் ஸஞ்சாரத்திலிருந்து ஆரம்பித்து, ஒரு சின்ன புல், பூண்டு அல்லது கொசு உண்டாகிறவரை, எல்லாம் ஒரே மாதிரி நியதிப்படி, ஒழுங்குப்படி நடந்து வருகிறது.

லோக வாழ்க்கை க்ஷேமகரமாக நடக்க இந்த ஒழுங்குதான் ஒத்தாசை பண்ணுகிறது. இயற்கைச் சக்திகளை எல்லாம் ஒழுங்குபடுத்தித்தான் பரமாத்மா லோக வாழ்க்கையை உண்டாக்கியிருக்கிறார். ஆனாலும் இதிலே கொஞ்சம் கொஞ்சம் ஒழுங்கு தப்பிப் போகிற மாதிரியும் நடக்கவிட்டு வேடிக்கை பார்க்கிறார்! வாழ்க்கைக்கு அனுகூலம் செய்ய வேண்டிய

இயற்கைச் சக்திகள் அப்படிச் செய்யாமலிருக்கிறதையும் பார்க்கிறோம். காலத்தில் மழை பெய்ய மாட்டேன் என்கிறது; அல்லது வெள்ளம் வருகிறது. வேறு ஏதாவது உத்பாதம் உண்டாகிறது.

ஒழுங்கு தப்பிப் போவதில் இந்த மனுஷ்ய மனஸ் இருக்கிறதே, அது எவ்வளவு தூரம்தான் போகும் என்றே சொல்ல முடியாமல், குட்டிச் சாத்தானாக அலைகிறது! பிரபஞ்ச வாழ்க்கை முழுவதிலும் எத்தனையோ ஒழுங்கு, கட்டுப்பாடு, நியதி இருந்தாலும், இந்த மனஸை எடுத்துக் கொண்டால், இது மட்டும் ஒரு கட்டுப்பாடும் இல்லாமல் வெறிநாயாகத் திரிகிறது.

இயற்கைச் சக்திகள் நமக்குப் பிரதிகூலமாக இருக்கிறபோது, அவற்றைச் சரிப்படுத்த வழி உண்டா? நம் மனஸைக் கன்னா பின்னா என்று விடாமல் கட்டுப்பாட்டில் கொண்டு வர ஏதாவது வழி இருக்கிறதா?

சலனம்–சப்தம் இதனால்தான் சகல காரியமும் ஏற்பட்டிருக்கிறது என்றால், லோக சக்திகளை அனுகூலம் பண்ணித் தரவும், நம் சித்தத்தையே சுத்தம் பண்ணிக் கொடுக்கவும்கூடச் சப்தங்கள் இருக்கத்தான் வேண்டும். அவைதான் வேதம், வேதம் என்பது.

நம்முடைய ச்வாஸ கதியாலேயே, நாம் யோக மார்க்கத்தின் மூலம் பரமாத்மாவின் ச்வாஸத்தைப் பிடித்து, லோகோபகாரமாகவும், ஆத்ம க்ஷேமகரமாகவும் உள்ள காரியங்களை நடத்திக் கொள்ளலாம். இங்கே நாடிச் சலனம் இருந்தாலும் அது மனுஷ்யக் காதுக்கு எட்டக் கூடிய சப்தமாக இருக்கவில்லை. ஸயன்ஸிலேயே மனுஷ்யனின் காதுக்கு எட்ட முடியாத சப்தங்கள், மனுஷ்யக் கண்ணின் லென்ஸுக்கு அகப்படாத ஒளி அலைகள் எல்லாம் உண்டு என்று ஒப்புக் கொண்டிருக்கிறார்கள்.

இது மட்டுமில்லை. எட்ட முடியாததை நமக்கு எட்டுகிற மாதிரி மாற்றிக் கொடுக்கவும் முடிகிறது. ரேடியோவில் ஒருத்தன் பாடுகிறான் என்றால், முதலில் அவன் பாடுகிற சப்தங்கள் மின்சார சக்தியினால் ஒரு விதமான காந்த அலைகளாக

மாறிவிடுகின்றன. இப்படி மாறின அலைகள்தான் ஆகாசத்தில் விடப்படுகின்றன. அப்போது இவற்றை நாம் காதால் கேட்க முடிகிறதா? இல்லை. ஆனாலும் ரேடியோப் பெட்டியில் உள்ள கருவிகள் ஆகாசத்தில் இருக்கிற அந்த மின்சாரக் காந்த அலைகளைப் பிடித்து மறுபடி நம் காதுக்கு எட்டுகிற மாதிரியே சப்த அலைகளாக்கிப் பாட்டாகக் கொடுக்கிறது.

இதைச் சொல்லும்போது விஞ்ஞானம் மதத்துக்கு விரோதியே இல்லை; மதத்தை வளர்க்க அதுவேதான் ரொம்ப ஒத்தாசை செய்கிறது என்று தோன்றுகிறது. ஒரு நூற்றாண்டுக்கு முன் டெலிஃபோன், ரேடியோ ஆகியன வருவதற்கு முந்தி, 'வேதசப்தமாவது, ச்வாஸமாவது?' என்று யாராவது நாஸ்திகர்கள் ஆக்ஷேபணை கிளப்பியிருந்தால், அவர்களுக்குப் பதில் சொல்லவே முடியாமல் இருந்திருக்கும். இப்போது இந்த ஸயன்ஸ் discoveries (கண்டுபிடிப்புகள்) தான் நமக்குக் கை கொடுக்கின்றன!

ஜடமான ரேடியோப் பெட்டிக்கு இருக்கிற சக்தியைச் சைதன்யமுள்ள ஜீவர்களும் சம்பாதித்துக் கொள்ள முடியும். அதற்கு மேலும் செய்ய முடியும். தபஸ்தான் இந்தச் சக்தியைத் தருவது. ஒரு ஸத்தியத்தைத் தெரிந்து கொண்டுதான் ஆவது என்று, அதற்காக அன்ன ஆகாரத்தை விட்டு, வீடு வாசலை விட்டு, எப்போது பார்த்தாலும் அதே சிந்தனையாக மனஸை ஒருமுகப்படுத்தி விட்டால், அதுதான் தபஸ். இத்தனையிலும், 'நான் இத்தனை பிரயாசைப்படுகிறேன் அல்லவா? அதனால் எனக்கு ஸத்தியம் தெரிந்தே ஆகவேண்டும்' என்ற அஹம்பாவம் இருக்கக் கூடாது. நாம் எத்தனை பிரயாஸைப் பட்டாலும், பகவத் பிரஸாதமாகத்தான் எந்த ஸத்தியமும் பிரகாசிக்கும் என்ற விநயம் எப்போதும் இருக்க வேண்டும். இம்மாதிரித் தபஸ் பண்ணி, யோக நிலையின் உச்சிக்குப் போனவர்கள்தான் ரிஷிகள்.

**அடுத்த புத்தகத்தில்...**

**வேதம் என்கிற தலைப்பின் கீழ்க் கட்டுரைகள் தொடர்கின்றன.**

